யாத சுபாவமுள்ளவை. "ஸத்தியம்வத" என்ற சுருதி வாக்கியம் உடனே "தர்மஞ்சர" என்று கோஷிக்கலாயிற்று. "ஸத்தியமேவ ஜயதே" என்ற சுருதி "நாந்ருதம்" எனக் கூட்டிச் சொல்லிற்று. அதாவது "மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்று வெல்வது வெல்லாதது இரண்டையும் வற்புறுத்தியது. "தத்ஸத்" என்று சொல்லிய சுருதியே "ந-இதி=நேதி" என்ற வாக்கியத்தையும் வெளியிட்டது. ஆகையால், ஒருதலை நியாயமும், ஓரப்பேச்சும் ஸ்திரப்படாது; நல்லது பொல்லாது இரண்டுங் கலந்தேயிருக்கும் காரணத்தால் பொல்லாததை யடக்கி நல்லதை யனுசரித்தாள வேண்டும்.

உண்ணும் உணவில் அமுதமும் நஞ்சுங்கலந்தேயிருக்கிறது. உணவிலுள்ள அமுதத்தை (அன்னப்பாலை) க்கிரகித்துக் கொண்டு நஞ்சை மலபாகமாகக் கழித்துவிடும் சக்தி ஜட சக்தி ரூபமான தேஹத்திற்கு மிருப்பது போல், மடமையோடு கூடிய மந்த புத்தியிலும் கடமையைச் செலுத்தும்கிருபாநோக்கம் அமைந்தேயிருக்கிறது. மனிதன் தேறுவதும் கெடுவதும் தன்னாலேயேயன்றி அவனுக்கு அந்நியமான வேறொன்றால் அல்லது வேறொருவரால் அல்ல. ஆகையால் தான் "தானே தனக்குப் பகையும் நட்டானும்" என்று ஓதினர் திருமந்திரம் ஓதிய திருமூலதேவர். இந்த உலகம் சூத்திரப் பாவைபோல் சுழன்றுழன்று வருகின்றது. பாவை யென்பது ஜடப்பாகம்: பொம்மை போல் நாமரூபமாத்திரத்தால் விளங்குவது. சூத்திரம் என்பது அதை யாட்டுவிக்கும் கயிறு. இது சூக்ஷ்ம சக்தி ரூபமாயுள்ளது. இதுவே பிராணசக்தி! இதற்கு இயக்கும் சக்தியுண்டானாலும் தானாக இயங்கும் சக்தியில்லை. ஆகையால் சூத்திரக்கயிறு பொம்மையை ஆட்டிவைக்கு மானாலும் அதற்குத்தானாக ஆடும் சக்தி கிடையாது. ஆகையால் அதை யிழுக்கும் ஒருவன் அது இயங்குவதற்குக் காரணமாக அதற்கும் பின்னால் இருக்கவேண்டும். இப்படியாக பொம்மலாட்டம் போல் ஆடும் இந்த உலகத்தில் காரணம், காரியம், என்கிற இரண்டிற்கும் நடுவாயுள்ள மத்தியஸ்தலத்தில், காரணமுமில்லாமல் காரியமுமில்லாமல், காரணத்தோடுசேர்ந்து காரணமாயும், காரியத்தோடுசேர்ந்து காரியமாயும், காரணகாரிய மத்தியஸ்தானமாய் அநிர்வசநீயமாய்த் தோன்றுவதும் மறைவதுமாயுள்ள தொன்றுண்டு. அதுவின்றிப் போனால் உலகம் வியவகாரமற்று விழுந்துபோம். வியவகார மற்றுப் போனால் உபகாரம், அபகாரம்இரண்டும் இருக்க இடமின்றி மறைந்து போம்.

இப்படி வியவகாரமற்று, வியவஸ்தைபற்று, பேதாபேதமற்று, நிர்த்துவந் துவமாய், நிராகாரமாய், நிர்மலமாய், நிராமயமாய், ஒன்றிரண்டென்பதுமற்று, எங்கும் நிறைந்த வஸ்துவாயிருப்பது எதுவோ அதுவே "God at Rest" என்று சொல்லும் சிவம்.

நித்தமுத்த சுத்தப் பழம்பொருளான சிவம் என்பதில் சிகாரம் தானே வியவகாரமற்ற பரிபூரண நிலை. வகாரமே உபகாரம் என்கிற உத்தம சக்தி நிலை. மகாரம் என்பது மாயாரூப மார்ஜ்ஜலராமனும் மனோவிகாரம்—(கோழை மனம்). இது அபகாரமே உருவாய்க் கொண்டது. இப்படியாக வியவகாரமற்ற நிராகார நிலைக்கும் அபகாரமே யுருவான கோழைமனதாம் குடிகெடுக்கும் சக்திக்கும் நடுவேயிருந்து மத்தியஸ்தம் செய்வது "உபகாரம்" என்னும் உத்தமசக்தி. நிர்விகார நிலையே 'சத்தியம்' என்பது. மனோவிகாரம் அல்லது கோழைமனம் என்பது 'அசத்திய'மாம். சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் இடையிலிருப்பது "சத்தியாசத்தியம்."

## The Dance or Play—திருக் கூத்து.

ஒரு காலத்திலே ஸத்தியத்துக்கும் அஸத்தியத்துக்கும் எதிர்முறை வழக்குண்டாயிற்று. ஸத்தியம் "மெய்யே வெல்லும்" என்ன, அசத்

தியம் "பொய்யே வெல்லும்" என்று விருதுகட்டிக் கொண்டு கிளம்பியது. இவர்களிருவரும் இப்படி திவஜம் கட்டிக்கொண்டு சண்டை செய்வதற்கு ஆஸ்பதமாய் ஆபத்துக்கிடமான அபவாத மொன்று குறுக்கே வந்து நின்றது. இருவரும் வெகு காலம் வாதித்தும் முடிவு எய்தாமையால் உபய ஸம்மதமாய் இருவரும் "ஸத்தியா ஸத்திய ரூப" மத்தியஸ்தானலீலை நடுவிருந்து வழக்குத்தீர்க்கக் கோறிக் கொண்டார்கள். சத்யம் தனக்கும் அஸத்தியத்துக்குமுள்ள வித்தியாஸத்தை விசாரித்துத் தீர்க்க வேண்டுமென்று கோறிக் கொண்டது. அஸத்யமோ தனக்கு ஸத்யம் செய்யும் இடையூறை மட்டும் களைந்து தீர்ப்புச்சொல்ல வேண்டுமென்று கோறிக் கொண்டது. இடையிலே "காக்காய் பிடிக்கிற தந்திரம்" பயின்ற 'டுக்ருங்கரணே' என்கிற தர்க்கவாத நிபுணர் "பாலுக்குங் காவல் பூனைக்குந் தோழன்" என்கிற பழமொழி வழக்கை யனுசரித்து லீலார்த்தமாகத் தானே தர்க்கவாத நியாயம் பேச வுடன்பட்டார்.

இதை யெல்லாம் உள்ள துள்ளபடி யெடுத்தெழுதினால் "கொள்ளைக் கண்ணிக்கு (அவித்யாஸம்பந்தர்களுக்கு) கோப்பாளமா" யிருக்கும். ஆனால் தத்துவார்த்தமாகப் பார்க்க அகக்கண் படைத்தவர்களுக்கு,—

"எங்குந்திருமேனியெங்குஞ்சிவசத்தி
யெங்குஞ்சிதம்பரமெங்குஞ்சிவநட்டம்
எங்குஞ்சிவமாயிருத்தலாலெங்குந்
தங்குஞ்சிவனருட்டன் விளையாட்டதே."

என்னும் திருமந்திரத்தினுண்மை யுள்ளபடி விளங்கும்.

—:*:—

## "To Marry or not to Marry—That's the Question."

—:-:—

### ஏகாங்கியாக விருப்பதா? போகாங்கியாக விருப்பதா?

"As you prophesied some days ago I have taken my choice"—Umaya Shankar.

"செய்யதெங்கிலேயிளநீர்சேர்ந்த காரணங்கள்போல்
ஐயன்வந்துளம்புகுந்து கோயில்கொண்டனன்!
ஐயன்வந்துளம்புகுந்து கோயில்கொண்டபின்
வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்பதில்லையே"
—சிவவாக்கியர்.

செம்மையாய் வளர்ந்த தென்னை மரத்தின் காயாகிய தேங்காயினுள்ளே இளநீர் இருக்கிறது எல்லாருக்கும் தெரியும். அது குரும்பையாயிருக்கும் பொழுது அதனுள்ளே ஜலமில்லை. ஸாரமாயிருக்கிற நீரும் உப்புக்கரிக்கும். ஆனால் தேங்காயுண்டானபின் அதற்குள் இளநீர் இருக்கிறது. அந்த இளநீர் அங்கேயெப்படி வந்தது? அது தான் தெங்கின் இரகஸியம். அந்த ரகஸியத்தையாரும் புகுந்துபார்க்கமுடியாது. அதே மாதிரியாக மனம் பக்குவமடையவடைய ஹிருதயம்சுத்தியெய்தும். சுத்தியான ஹிருதயத்திலே அருள்சுரக்கிறது. அருள்சுரந்தால் இருளகன்று மருள்நீங்குகின்றது. மருள்நீங்கினால்தெருளுண்டாகி மனம் தெளிகிறது. மனம் தெளிந்தவிடத்தில் ஸ்வரூபதெரிசன முண்டாகிறது. இந்தஸ்வரூப தெரிசனங்கண்டவன் நித்யாநித்யவஸ்து விவேகியாக விளங்குகிறான்.

தேங்காய் முதிரமுதிர இளநீர் சுருங்கி உள்ளேயிருக்கும் மணி முதிர்ந்து கொப்பரையாகிறது போல் ஸ்வரூபதரிசனமானபின் சிந்தை விரிந்து தெளிந்து சிந்தாமணி யாகிறது. சிந்தாமணியே கொப்பரை. கொப்பரையில் தைலமிருக்கிறது போல், சிந்தாமணியில் ஆத்மப்பிரகாசமிருக்கிறது. மணியில் ஒளிபோலிருந்து இந்த ஆத்மப் பிரகாசம் ஆத்மானுசந்தானத்தால் விருத்தி ஞானமாகி, அதன் முடிவில் ஸ்வரூபத்

தையும் விழுங்கித் தானேதானாய்த் தன்மயமாய் நிற்கிறது. இதுவே சமாதி ஞானமாம். "ததேவ மாத்ர நிர்ப்பாஸம் ஸ்வரூப சூந்யமிவ ஸமாதி" யென்பது பதஞ்சலி யோகசூத்திரம். "நான்" என்கிற விருத்தி ஞானம் அற்று, தத்பதலக்ஷிய மாத்திரமாய் தியானம் நழுவித் தியேயாகார மாத்திரமாய் நிற்பது சமாதி. இந்த சமாதி நிலையில் "எட்டெட்டுசித்தியு மெய்துமே" என் றோதியுள்ளார் திருமந்திர மோதிய திருமூல தேவர்.

இந்த "எட்டெட்டு சித்தியும்" தானே தானாய் வந்தெய்தினாலும், ஸத்துக்கள் அவைகளை லக்ஷியம் செய்யமாட்டார்கள். ஏனெனில் தத்பதலக்ஷியம் நழுவின விடத்தில் திரிபுடிமுளைக் கும். திரிபுடி உண்டான விடத்தில் சங்கல்பம் முளைக்கும். சங்கல்ப முண்டானால் விகல்பமு முண்டாகும். சங்கல் விகல்பமுண்டானால் மனம் முளைத்தெழுந்து சுரங்குச் சேஷ்டை யெல்லாம் செய்யும். மனோசேஷ்டை யுண்டான விடத்து ஸம்ஸாரபந்தம் வந்தெய்தும். "ஸம்ஸாரம், ஸாகரம், துக்கம்" என்று சொல்லியிருப்பதால், பவஸாகரத்தில் சுகதுக்கமாகிய அலைகளால் மொத்துண்டு வருந்த நேரும். ஆகையால் ஸத்துக்கள் சித்திகளை லக்ஷியம் செய்யார்.

ஆனால் "சமாதியிலெட் டெட்டு சித்தியுமெய்துமே" யென்று திருமந்திரம் கூறுகிறதே! அவைகளின் பிரயோஜனமென்ன? வென்று காரியவாதிகள் கேட்கலாம். காரணமாத்திர மாயுள்ளவர்கள் காரியவர்திகளுக்குச் சமாதானம் சொல்வது முடியாது. ஆதலால்தான் சிவவாக்கியர்,—

"ஐயன் வந்தெனுளம் புகுந்து கோயிலங்கேகொண் டபின்
வையகத்தில் மாந்தரோடு வாய்திறப்பதில்லையே"

என்று தரிசனமகிமையை யெடுத்துக் கூறினர்.

"வையகத்தில் மாந்தரோடு வாய்திறப்பதில்லை" யென்றாலும் வையகத்து மாந்தர் (worldly men) வழக்கொழிந்து போகாது. ஏனெனில் வையகமென்பதே வியவகார ரூபமாயிருப்பது. வியவகாரமென்று இருந்தால், அது, உபகாரம் அபகாரம் எனத் துவந்தாகாரமாய் மிதுனப்பட்டு நிற்கும். வியவகாரத்தில் ஒருவனுக்கு உபகாரம் செய்தால் அது மற்றொருவனுக்கு அபகாரமாகவே முடியும். இப்படி உபகாரமும் அபகாரமும் இணைபிரியாத தம்பதிகள் போல் மிதுன சக்தியால் பிணைக்கப்பட்டுத் துவந்தாகாரமாய் நிருத்தம் செய்து வருவதே வியவகாரம். இந்த வியவகாரத்துக் கிருப்பிடமாய் வியவகார புருஷனுக்கு க்ஷேத்திரமாய் இருப்பதே உலகம். உலகத்தையும் அதன் காரியத்தையும் அதிஷ்டித்திருப்பவன் புருஷன். புருஷனை அனுஷ்டித்திருப்பது பிரகிருதி. பிரகிருதி புருஷனிரண்டுஞ் சேர்ந்திருப்பது போகாங்கம். பிரகிருதி புருஷனிலொடுங்கி யிருப்பது ஏகாங்கம். சமஷ்டியிற் போல் வியஷ்டியிலு மிப்படியே. போகாங்கி பிரவிருத்தி மார்க்கத்தை யனுசரித்துக் கிரமமுத்தியால் கடைத்தேறுவான். ஏகாங்கி நிவிர்த்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஸம்ஸாரத்தை யொழித்து ஸத்யோமுத்தியால் கடைத்தேறுவன். பிரவிருத்திமார்க்கம், நிவிருத்திமார்க்கமிரண்டுஞ் சேர்ந்தது ஸநாதனமான தர்மம். இந்த தர்மத்தை யனுசரிக்க ஏகாங்கியாக விருப்பது உசிதமா? போகாங்கியாக விருப்பது உசிதமா? என்பது கேள்வி.

பகவான் ஸனகர், ஸனத்குமாரர் முதலிய குமாரர்களால் நிவிருத்திமார்க்கத்தையும் மரீசி முதலிய பிரஜாபதிகள் மூலமாய் பிரவிருத்தி மார்க்கத்தையும் அனுசரிக்கும் வழிகாட்டி தர்மத்தை ஸ்தாபித்தார். ஆகையால் பிரஹ்மசாரியிருக்கிற வாலிபன் கலியாணம் செய்துகொண்டு ரியா (மாணக்கன) போகாங்கியா யிருந்தால் ஸத்யத்தை கண்டு பிடிக்கலாமா? கலியாணம் செய்துகொள்ளாமல் ஏகாங்கியாகவிருந்து பிரமசரிய விருதம் அனுசரித்தால் ஸத்யத்தைக்

கண்டுபிடிக்கலாமா? என்று கேட்டால், அவனுக்குஎன்ன பதில் சொல்கிறது?

உபகார, அபகார ரூபமான வியவகாரத்தில் மூழ்கியிருக்கையில் ஒரு மாணாக்கன் வந்து இந்தக் கேள்விக்கு பதில் சொல்லவேண்டும்.— "எனக்குத் தானே தானுயிருந்து யோஜித்து முடிவுகட்ட முடியவில்லை. ஐயனே யும்மைச் சரணமென்றடைந்தேன். நீர் சொன்னபடி கேட்பேன். ஸம்ஸாரத்தில் புகச்சொன்னாலும் புகுவேன். பிரஹ்மசாரியா யிருக்கச் சொன்னாலு மிருப்பேன். ஸத்யத்தை யறிந்து அனுபவிக்க வேண்டியது ஒன்றே யென் நோக்கம். அதற்கு இசைந்த வழி யெதுவோ அறியேன். ஆனால் பந்துக்களும் சுற்றத்தாரும் விவாகம் செய்துகொள்ளச் சொல்லி நிர்ப்பந்திக்கிறார்கள். சில வருஷங்களாக அவர்கள் நிர்ப்பந்தத்திலகப்படாமல் தானே தப்பியிருந்தேன். இப்பொழுது நான் தாயுமற்றுத் தந்தையுமற்று உண்மையு முணராப் பாலனா யிருப்பதால், விவாகம் செய்து கொள்ளும் வயதானாலும் விவாகத்தில் எனக்கு மனது செல்லவில்லை. ஆனால் நிர்ப்பந்தம் செய்யும் பந்துக்களுக்கு பதில் சொல்லவும் சற்று யோஜனையாகவே யிருக்கிறது. ஏனெனில் இறந்துபோன என்பிதா எனது அம்மான் குமாரத்தியை நான் விவாகம் செய்து கொள்ள வேண்டு மென்று வெகு காலமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் இறக்கும் பொழுது அந்த எண்ணத்தோடு தானே யிறந்தார். உயிரோடுள்ளவர்கள் வாக்கை மீறி நடப்பது எனக்கு அவ்வளவு பெரிதாகவில்லாவிட்டாலும், இறந்தவர் எண்ணத்துக்குப் பங்கம் செய்யப் பெரிதும் யோசனையாகவே யிருக்கிறது. ஆயினும் உண்மைவழியில் நடக்க எது அனுகூலமோ அதைக் கிருபை கூர்ந்து சொன்னால் அப்படிநடக்கக் காத்துக் கொண்டிருக்கிறேன்"— என்று விண்ணப்பம் செய்து கொள்ளும் வாலிபனுக்கு வழியென்ன சொல்கிறது?

"அன்புக்குத் தாப்பாள் கிடையாது. அன்பு நிறைந்தால் அது தானாக வழிந்து ஓடும். அன்பு குறைந்தால் எந்தவழி பற்றிச் சென்றாலும் குறைகுடம் கூத்தாடுந்தான். ஆகையால் அன்புவழிப்பட்டு நடத்தலே சத்திய மார்க்கம்! அன்புவழிப்பட்டார்க்கு ஒரு குறைவும் வராது. ஆகையால் உன் உள்ளன்பு செல்லும்வழியே செல்வாயாகமகனே!" யென்று அருள் கூர்ந்து ஆர்வநிறைந்துரைத்த ஆசானை வணங்கி, ஆத்மபுத்திர னாகிய மாணாக்கன் பின்னும் சொல்கிறான்.

"ஐயனே, எனக்கு இன்னமசித்தம் தெளியவில்லை. மனம் குழம்புகிறது. முன் பின் தெரியவில்லை. எவ்வழி பற்றினாலும் இடையில் எழும் சங்கைகளுக்குச் சமாதானம் சொல்லத் தெரியாது மயங்குகிறேன்."

"மகனே, இருவழியில் ஒன்றைப்பற்றி அவ்வழியிலுதிக்கும் சங்கைகளை யெல்லாம் குறிப்பிட்டுக்கொண்டுவா பிள்ளாய்! உன் ஆக்ஷேபணைகள்தான் என்ன வென்று பார்ப்போம்!"

"சரி! அப்படியேசெய்கிறேன்!" என்று விடைபெற்றுச் சென்ற மாணாக்கன் கட்டுக் கட்டாய்த் தனக்குத் தோன்றிய சங்கைகளை யெல்லாம் குறித்து தனக்குத்தானே ஆக்ஷேபசமாதானங்கள் சொல்லிச்சொல்லி யலுத்துக்கடைசியில் ஒன்றுந் தோன்றாது சோகமுற்று மூர்ச்சித்தவன் போல் மனம் களைத்து ஏதும் எண்ணத் தோன்றாது நின்றான். அப்பொழுது தயாளுவான குரு சோகத்தினால் மூர்ச்சித்து விழுந்த அர்ச்சுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணபகவான் ஆத்மோபதேசஞ் செய்ததுபோல், ஏகாங்கியாயிருப்பதா? யோகாங்கியாக விருப்பதா? என்று கேட்ட மாணாக்கனுக்கு தர்மத்தின் ஸ்வரூபத்தை யுபதேசித்து அது ப்ரவிருத்தி நிவிருத்தி யென இருவிதமாகப் பிரிந்திருக்கிறதென்றும், எவ்வழியில் சென்றாலும் முடிவில் பிரவிருத்தி நிவிருத்தியிரண்டுமொன்றாக வொடுங்குவதேதர்மஸ்வ

ரூப மென்றும், கர்மம் ஒழிந்தாலன்றி தன்மயம் விளங்காதென்றும், கர்மமுள்ள மட்டும் தர்ம முண்டு என்றும், கர்மத்தைக் கடக்க தர்மவழியே பற்றி நடக்க வேண்டு மென்றும், கர்மத்தைப் பற்றின்றிக் கடமை யெனக் கருதிச் செய்தால் ஹிருதய சுத்தியுண்டாகுமென்றும், ஹிருதய சுத்தியுண்டானால் அருள்வெளி தோன்றுமென்றும், அருள் வெளியில் மருளெல்லாம் நீங்கித் தெருள் (மனத்தெளிவு) உண்டாகு மென்றும், மனத்தெளிவுண்டானால் மாயை மயக்கமின்றி ஸ்வரூபம் விளங்கு மென்றும், ஸ்வரூபதரிசனத்தில் எல்லாம் வெள்ளிடை மலைபோல் ஐயந்திரிபற ஆத்மானந்தமாக விளங்கு மென்றும் அருட்கண்பார்வையால் சற்சிஷனை நோக்கித் தர்மோபதேசஞ் செய்ய, அருட்பார்வையினால் மனந்தேறின மாணவன்- "ஐயனே! நான் சிந்தாகுல மொழிந்தேன்! மனந்தேறினேன். குருமொழியைச் சிந்தித்துள்ளத் துதிக்கிறதைத் தெரிவிக்கிறேன்'.—என்று சொல்லிச் சென்றான். சிலதினங்கள் கழித்து "ஐயனே! தாங்கள் சொல்லியபடியே யிருந்தது. நானறியாப் பருவத்தே யெனையறிந்தாண்ட என் ஐயனுக்கு வந்தனம். குருவருளைச் சிந்தித்து ஒருவழியில் மனந்துணிந்தேன். அவ்வழியும் என் ஐயன் உபதேசித்தபடி தர்மவழியே யென்று உள்ளந்தேறி உவகைப் பூக்கலானேன்" என்று எழுதினான்.

—(*)—

## Our King-Emperor's Declaration of Faith.

### Universal Loving Sympathy.

### நமது சக்ரவர்த்தியவர்களின் ஜீவகாருண்யம்.

"No less confident am I in the universal loving sympathy which is assured to my dearest mother in her overwhelming grief. Standing here a little more than nine years ago our beloved King declared that as long as there was breath in his body he would work for the good and amelioration of his people. I am sure that the opinion of the whole nation will be that this declaration has been fully carried out. To endeavour to follow in his (Edward VII) footsteps and at the same time to uphold the constitutional Government of these realms will be the earnest object of my life. I am deeply sensible of the very heavy responsibilities which have fallen upon me. I know that I can rely upon Parliament and upon People of these Islands and of my Dominions beyond the Seas for their help in the discharge of these arduous duties and for their prayers that God will grant me strength and guidance. I am encouraged by the knowledge that I have in my dear wife one who will be a constant help-mate in every endeavour for our people's good."

"யதாராஜாததாப்பிரஜா" என்னும் வாக்கியம் மெய்யே யென்பதிற் சந்தேகமில்லை. ஏனெனில் பகவான் மனிதர்களில்தான் ராஜாவா(சந்தோஷிப்பிக்கிறவரா)யிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறபடியாலும், அரசன் இராஜ்ஜிய லக்ஷ்மிக்குத்தலைவனாகையாலும் அரசன் எப்படி யிருக்கிறானோ அப்படியேபிரஜைகளு மிருப்பார்கள். மன்னுயிரைத் தன்னுயிர்போல் காப்பது இராஜதர்மம். அப்படிக் காக்க ஜீவகாருண்யம் வேண்டும். ஜீவகாருண்யம் என்றால் என்ன? ஜீவன்களிடத்தில் கருணை பாராட்டல் ஜீவகாருண்யமாம். கடவுள் கருணாரஸ ஸாகரம். கருணாரஸம் என்று சொல்வதே "Milk of human kindness" என்று சொல்வதுமாகும். "Universal loving sympathy" என்றாலும் அதுவே. மானிடஜன்ம மெடுத்தவரெல்லாருக்கும் பொதுவாயிருப்பது பிறப்பும் இறப்பும். பிறப் பிறப்புள்ள மனிதர் எல்லாருக்கும் பொதுவாயிருப்பது சுகதுக்கம். "ஸம்ஸாரம் ஸாகரம் துக்கம்" என்றிருப்பதால் பவஸாகரமாகிய ஸம்ஸாரமே துக்க ரூபமாயுள்ளது. இந்த துக்கத்தில் சுகமெங்கே யென்றால் சுகமில்லாத துக்கமும் துக்கமில்லாத சுகமும் உலகத்தில் கிடையாது. உலகம் துவந்த்வாகாரமாய் நின்று மிதுனசக்தியாலியங்குவதாயிருக்கிறது. இப்படிப்பட்ட உலகில் நலமும் தீதும் கலந்தேயிருக்கிறது. இவற்றைப் பிரித்துப் பிரித்துக் கெட்டதைத் தள்ளி நல்லதை வளர்த்து வந்தால் மனது அப்பியாஸ விசேஷத்தால் கெட்டதைத்தள்ளி நல்லதையே பற்றி

நிற்கும். ஓரேபூமியில்கரும்பும் வேம்பும்விளைய, கரும்பு தித்திப்பாகவும் வேம்பு கசப்பாகவு மிருப்பதுபோல், விஷயதை யொன்றுயிருக்க மனோபக்குவத்தால் அதிலிருந்து நல்லதும் பொல்லாதும் தானே யுண்டாகும். தர்ம்ம புத்திரனாகிய யுதிஷ்டர மஹாராஜாவுக்கு உலகத்தில் அதர்மவான்கள் அகப்படுவது அரிதாயிருந்தது. தர்மம் தலையெடுக்க வேண்டுமென்பதைத் தவிர வேறு எண்ணம் அவர் உள்ளத்திற் குடிகொள்ள வில்லை. ஆகையால் மனப் பழக்கம் போல் உலகத்தில் நல்லதும் பொல்லாதும் விருத்தியாகும். "கற்றதோர் கல்வியும் மனப் பழக்கம்" என்றார் ஔவையாரும். கடவுளுடைய பாத பத்மங்களை யறிந்து தொழாவிடின் கற்றதானலான பயனென்கொல்? என்றார் திருவள்ளுவநாயனாரும். ஆதலால் அன்பும் அனுதாபமும் விருத்தியாகாவிடின் கற்ற கல்விக்குப் பயனிலதாம். "மனப் பழக்கம்" என்றாலும் "சித்த விருத்தி நிரோதனம்" என்றாலும் ஒன்றே. மனதைநிறுத்தப் பழகுவதே பழக்கம். எனெனில் மனதுநின்றதானல்,—

"நின்றிடுமேழ்கடலேழ்புவியெல்லாம்
நின்றிடுமுள்ளம்நினைந்தவைதானெக்கும்
நின்றிடுஞ்சக்திநிலைபெறக்கண்டிட
நின்றிடுமேலை விளக்கொளிதானே
நின்றிடமனத்துளேயில்லடைந்தாளுமே."

என்பது ஸத்யம் ஸத்யம். மனதை நிறுத்தக் கற்றால் ஸர்வஞ்ஞத்துவமும் ஸர்வவல்லமையும் தானே வந்தமையும். ஆகையால் அன்பு நிறைந்த ஹிருதயத்திலிருந்து அனுதாபக் கிரணங்கள் எங்கும் சென்று எல்லாரையும் களிப்பிக்கின்றன. அன்பே சிவமாதலால், அனுதாபமே சிவசக்தி. ஆகையால் இந்த அனுதாபத்தில் யாருக்குப் பூரண நம்பிக்கை யிருக்கிறதோ அவர் சக்தியருள் பெற்றவராகிறார். நமது இந்தியா சக்ரவர்த்தியாகிய ஐந்தாவது ஜார்ஜ் அவர்களுக்கு இந்த அனுதாபசக்தியில் பூரண நம்பிக்கையுண்டென்று அவர் மனோ வாக்குக் காயங்களால் வெளியிட்டிருக்கிறார்.

முதலாவது, அவர் இந்தியாவுக்கு விஜயமாய் வந்து திரும்பியதும், இந்தியர்களுடைய குணத்தைக் கிரகித்துக்கொண்டு அவர்களை யாள அனுதாபசிந்தை இன்னும் அதிகமாக வேண்டுமென்று சொன்னார். இரண்டாவது அவர் பட்டத்துக்கு வந்தபொழுது தமது பிதா இறந்த துக்கத்தில் தமது தாபாரைக் காத்து ரக்ஷிப்பதாகிய பொதுஜனப் பிரிய அனுதாபத்தில் அவருக்குப் பூரணநம்பிக்கை யிருக்கிறதாகச் சொன்னார். மூன்றாவது, அதே சர்தர்ப்பத்தில் அவருடைய தகப்பனார் பட்டத்துக்கு வந்தபொழுது தேஹத்தில் பிராணனுள்ள மட்டும் தமது பிரஜைகளின் யோக க்ஷேமத்தைநாடி யுழைப்பேன் என்றுசொன்ன வாக்கை யெடுத்துக்கூறி, அவர் அவ்வாக்குப்படி கடைசி வரையில் நடந்து கொண்டது போல் தானும் அவர் வழிபற்றி நடந்து கொள்வதாகச் சொன்னார். நான்காவது, இராஜ்ஜிய பட்டம் கிடைத்ததும் இராஜ்ய பாரத்தின் பொறுப்பை யுள்ளபடி யுணர்ந்தவராய் அதை வகிக்கிறதற்கு வேண்டிய சாதன சாதகங்களை உளவறிந்து கூறித் தேறினவராய்க் காட்டினார்.

ஜனங்களுடைய அனுதாபமும் சகாயமுமின்றித்தான் தனது பொறுப்பான கடமைகளைச் செலுத்த முடியாது என்று உள்ளுணர்வோடு கூறினார். இது ஐந்தாவது லக்ஷணம்.

ஆறாவது, எதற்கும் பகவத் அனுக்ரகம் வேண்டுமென்று ஜனங்ளெல்லாரும் பகவான் தனக்கு வேண்டிய புத்தி சத்தியை யளிப்பாரென்று பிரார்த்திக்க வேண்டுமென்றும் அப்படி பிரார்த்திப்பார்களென்று நம்பும் நம்பிக்கையே அவருக்குப் பேராதாரமா யிருக்கிறதென்றும் சொன்னார்.

ஏழாவது,

"முத்தியென்னப்படுமெங்கையைச்சேரமுயல்பவரும்
சத்தியென்னப்படுமீசனருளின்றிச்
[சார்தலுண்டோ!"

என்றமூதோர் வாக்கியத்தை யனுசரித்து, தான் என்னதான் தர்ம சிந்தையுடையவனுனும், தன் உள்ளன்பைத் தூண்டத்தக்க தர்மபத்நியில்லாத விடத்து அவை யெல்லாம் வியர்த்தமா மென்றுன்னி யுணர்ந்து தனது தர்மபத்நி தன்னுடைய பிரயத்தனங்களெல்லாவற்றிலும் தனக்கு உற்றவிடத் துதவியாய், உள் விளக்குத் தூண்டுகோலாய் ஸஹதர்மணியாக விருந்துதவுவாளென்று சொன்னர்.

எட்டாவது, தான் பட்டத்துக்கு வந்ததும் இந்தியர்களிடத்தில் தனக்குண்டான பிரீதியை மறக்காமல், தான் சக்ரவர்த்தியானபின் அவர்கள் நடுவே சென்று முடிசூட்டிக் கொள்ள வேண்டுமென்று உள்ளன்பு தூண்ட உவந்து சிந்தித்தார்.

ஒன்பதாவது, தனது நல்லெண்ணம் நிறைவேற எத்தனையோ இடையூறுகள் நேர்ந்ததையும் நீக்கிக்கொண்டு இந்தியாவந்து சேர்ந்தார்.

பத்தாவது, குழந்தையும் தெய்வமும் கொண்டாடு மிடத்திலென்பது பொருந்த, இந்தியாவில் ஜனங்கள் அவர் நல்வரவைக்கொண்டாடிக் குதூஹலப்பட்டதையே ஒரு சந்தோஷமாகக் கொண்டு ஆனந்தித்தார்.

இப்படியாக வுள்ள தசாங்கங்களாலும் நமது சக்ரவர்த்தினியவர்கள் ஜீவகாருண்ய முள்ளவரென்று காட்டியுள்ளார். ஜீவகாருண்ய மெங்கேயிருக்கிறதோ அங்கேயே ஜீவகாரணமான சித்தம் விளக்கும். சித்துள்ள விடத்தில் சிவம் விளங்கும். ஜீவகாருண்யத்தை விற்றுப் பிழைக்கிறவர்களுக்கு அதுவிளங்காது. ஆனல் அருள்பெற்றவர்களுக்கு விளங்கும்.

"பெற்றதாயைவிற்றடிமைகொள்ளுகின்றபேதைகாள்
சித்தில்லாதபோதுசிவனில்லையில்லையில்லையே!"

என்றார் சிவவாக்கியர். சித்தும் சிவமும் அபேதமாதலால் சித்துள்ள விடத்து சிவமும் உண்டுதான், இப்படியாக சிவசத்தி யருள்பெற்ற நமது சக்ரவர்த்தி தமது ஸஹதர்மிணியாகிய சக்ரவர்த்தினியோடு இந்த ஸ்ரீ 7-உ குருவாரத்தன்று டில்லியில் இராஜகோலத்தோடு பிரவேசித்து ராஜசூயயாகம் செய்து விராட் பட்டம் சூட்டிக்கொண்ட தர்மபுத்திரனைப் போல சிற்றரசர்கள் புடை சூழ்ந்து பணி செய்ய "டில்லி சக்ரவர்த்தி" யாக முடிசூட்டிக் கொண்டு விளங்குவார். இந்த தர்பார் ஆடம்பரங்களெல்லாம் 7 ம் தேதி முதல் 12-ந்தேதி வரையில் நடக்கும். ஆர்ப்பாட மனிதர்கள் அம்பலத்தாட, அன்பார்ந்த உண்மையர்கள் உள்ளறையிலிருந்தபடி உளவறிந்து எல்லாவற்றையும் சாக்ஷிமாத்ரமாக விருந்து இமையாக் கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஓம் தத்ஸத்.

---

## Pranayama Vidhih.
## பிராணயாமவிதி.

(வைத்திபநாத தீக்ஷீயப்படி)

பாரத்வாஜர் சொல்லுகிறார்:—

"காயத்ரி ஜெபம் செய்யுமுன் ஏகாக்ரமான மனதுடன் பிராணன்களை கும்பகம் செய்து கொண்டு பிராணயாமமந்திரத்தை பத்துத்தடவை ஜெபித்துவிட்டு பிறகு காயத்ரீயை ஜெபிக்க வேண்டும். இந்த ஜெபக்கிரமமானது ஸர்வ பாபங்களையும் போக்கக் கூடியது. வேறொரு ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. ஏழுவியாகிருதிகளோடு கூடியகாயத்ரி மந்திரத்தை சிரஸ் என்னும் மந்திரத்தோடு பத்துத் தடவைஜெபித்துவிட்டு அதன்பின் காயத்திரீயை ஜெபிக்க வேண்டும்.

பரத்வாஜர்முன் சொல்லிய வற்றிற்கு ரிஷி முதலியவைகளைச் சொல்லுகிறார்:—

பிரணவத்திற்கு ரிஷி: பிரம்மா; சந்தஸ்: தேவீ காயத்ரீ; தேவதை: பரமாத்மா.

எந்தகர்மத்தில் உபயோகப்படுத்துகிறேமோ அந்தக்கர்மத்தில் 'விநியோகஃ' என்று சொல்ல வேண்டியது.

'பிதாமஹஸ்மிருதி' ப்ரணவத்திற்கு ரிஷி: பிரம்மா; தேவதை: அக்கினியும், த்ரையியும் (த்ரையீ=மூன்று வேதங்கள்); சந்தஸ்: தேவி காயத்ரீ. ஜெபம் செய்யுங் காலத்தில் ப்ரணவத்திற்கு த்ரையீ தேவதையாகிறது. ஹோமகாலத்தில் அக்நி தேவதையாகின்றார். தியானகாலத்தில் பரப்பிரம்மம். மற்றகாலத்தில் விச்வதேவர்கள். வ்யாஹ்ருதிகளுக்கு முறையே அத்ரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கிரஸா,ரிஷிகள்; சந்தஸ்ஸுகள்: காயத்ரீ உஷ்ணிக், அனுஷ்டுபு, பிருஹதி,பங்தி, த்ருஷ்டுபு, ஜகதி; தேவதைகள்: அக்நி, வாயு, அர்க்கன், வாகிசன், வருணன், இந்திரன், விச்வ தேவர்கள். ஷ வ்யாஹிருதிகளுக்கு சக்திகள் பிராஹ்மீ, ஸ்வாஃ, ஆவாஹினீ, நித்யா, விலாஸினீ, ப்ரபவாவதீ, லோலா வர்ணங்கள் வெண்மை, கறுப்பு, மஞ்சள், பிசங்கம், கருஞ்சிகப்பு (ஊதாவர்ணம்), நீலம், தங்கத்தின் வர்ணம்.

காயத்ரிக்குரிஷி: விச்வாமித்ரர்; சந்தஸ்: தேவி காயத்ரீ; தேவதை: ஸவிதா.

சிரஸ் என்னும் மந்திரத்துக்கு ரிஷி: பிரம்மா; சந்தஸ்: அனுஷ்டுபு; தேவதை: பரமாத்மா.

யோகயாஞ்ஞியவல்ஞர் ரிஷி முதலியவற்றில் கொஞ்சம் பேதப்படுகிறார். எல்லா வியாஹ்ருதிகளுக்கும் ரிஷி ப்ரஜாபதி. தேவதை அக்நி, வாயு, ஆதித்யன், பிரகஸ்பதி, அப்பு, இந்திரன், விச்வே தேவர்கள். சிரஸ் என்னும் மந்திரத்துக்கு ரிஷி ப்ரஜாபதி; சந்தஸ்: யஜுஸ்; தேவதை: அக்நி, வாயு, சூரியன்; பிராணாயாமத்தில் விநியோகம்.

முற் சொல்லிய ரிஷியே நியாஸம் சொல்லுகிறார்:—

பாதம், கணைக்கால், முழங்கால், வயிறு, கண்டம், முகம்,சிரஸ், இந்த இடங்களில் முறையே வ்யாஹ்ருதிகளை நியாஸம் செய்யவேண்டும். பிறகு, முதல் வ்யாஹிருதியை கட்டை விரல்களிலும், இரண்டாவதை, தர்ஜ்ஜனிகளிலும், மூன்றாவதை மத்திமங்களிலும், பிறகுகாயத்ரியின் முதல் பாதத்தை அநாமிகைகளிலும், இரண்டாவது பாதத்தை சுண்டு விரல்களிலும், மூன்றாவது பாதத்தை இரண்டு உள்ளங்கைகளிலும் நியாஸம் செய்யவேண்டும்.

பிறகு முதல் வியாஹிருதியை ஹ்ருதயத்திலும், இரண்டாவதைச் சிரசிலும் மூன்றாவதை சிகைகளிலும், காயத்ரீயின் முதல் பாதத்தை கவசத்திலும், இரண்டாம் பாதத்தை மூன்று நேத்திரங்களிலும், மூன்றும் பாதத்தை எல்லா திக்குகளிலும், சிரஸ் என்னும் மந்திரத்தை ஸர்வாங்கங்களிலும் நியாஸம் செய்ய வேண்டும்.

இம்மாதிரி நியாஸம் செய்துவிட்டு பிறகு முத்திரை செய்துகொண்டு த்யானத்துடன் பூரகக்கிரமமாய் பிராணயாமம் செய்ய வேண்டும்.

வ்யாஹ்ருதிகளுக்கு முத்திரைகள்:—பத்மம், ஸௌரபைஹீ, சங்கம், வராஹம், வாஸுதேவம், ஆத்மா, ஸம்வித்.

'மந்த்ரதேவதாபிரகாசிகை' என்னும் கிரந்தத்தில் பிரணவத்திற்கு தியானம் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த சுலோகத்தின் அர்த்தம்:—பத்மாஸனத்தில் வீற்றிருப்பவரும், ஒளிபொருந்திய கிரீடம், தோடுவளை, கடகம், கண்டபூஷணம், முத்துமாலை, அரணாள் பாதகடகங்கள், ரத்ன குண்டலங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவரும் சங்கம், சக்ரம், கதை இந்த நான்கு ஆயுதங்களை கையில் தரித்தவரும் பீதாம்பர உடை தரித்தவரும் பாலசூரியன் போன்ற பிரகாசமுடையவருமான விஷ்ணுவை நமஸ்கரிக்கின்றேன்.

வியாஹிருதிகளின் தியானம்:—வியாஸர்சொல்லுகிறார்:—அந்தந்த வியாஹிருதிகளுக்குச்சொல்லிய வர்ணமான † தேகமுடையவர்களும் அழகும், யௌவனமும், பொருந்தியவர்களும், க்ஷௌமம் (நாரால் செய்த வஸ்திரம்) தரித்தவர்களும், ஸர்வாபரணங்களை அணிந்தவர்களும், திவ்யசந்தனம் பூசிக்கொண்டவர்களும், திவ்யபுஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவர்களும், வெண்மையான உபவீதம் தரித்தமார்பை யுடையவர்களும் பவித்திரம் தரித்த நான்கு கரங்களையுடையவர்களும், மலர்ந்த முகபத்மங்களையுடையவர்களும், ப்ரபாமண்டலத்தால் அலங்கரிக்கப் பட்டவர்களும், ஜடாமண்டலத்தில் தரிக்கப்பட்ட சந்திரனுடைய காந்தியால் நிரம்பிய திக்குகளையுடையவர்களும் அபயம் ஜபமாலை, கமண்டலு, வரம், இவைகளையுடைய நான்கு ஹஸ்தங்களை யுடையவர்களுமான வியாஹ்ருதி தேவர்கள் ஹோமம், ஜெபம் இவைகள் ஆரம்பகாலத்தில் த்விஜர்களால் தியானிக்கத் தகுந்தவர்கள்.

காயத்ரீத்யானம்:—முத்து, பவழம், சுவர்ணம், மூன்று கண்களையுடைய (ஐந்து) சிரஸுகளையுடையவளும் சந்திரகலையால் அலங்கரிக்கப்பட்ட கிரீடம் உடையவளும் (24) தத்துவங்களை அர்த்தமாகக் கொண்ட அட்சரங்களாலமைக்கப்பட்டவளும் வரம், அபயம், அங்குசம், கசை (குறடா) வெண்மையான கபாலம், பாசம், சங்கம், சக்கரம், இரண்டு பத்மங்கள் இவைகளை (பத்து) கரங்களில தரித்தவளுமான காயத்ரீயை தியானிக்கின்றேன்.

இம்மாதிரி பிராணயாமம் செய்வதற்கு ஸம்வர்த்தர் பலன் உரைக்கின்றார்:—மூன்று பிராணயாமம் செய்தால் மனஸ், வாக்கு, சரீரம் இவைகளால் செய்யப்பட்ட பாபங்களெல்லாம் உடனே நசிக்கின்றன. யோக யாஞ்ஞவல்கியர் சொல்லுகிறார்:—சூரியோதய காலத்தில் 3 பிராணயாமம் செய்தவர்கள் நிர்மலர்களாகி, பரம ஸுக்ருதமுடைய ஸத்துக்கள் போல் சுவர்க்கலோகத்தை அடைகின்றார்கள்.

மநு சொல்லுகிறார்:—பிராமணனுக்கு வியாஹிருதி ப்ரணவங்களோடு கூடிய விதிப்படி செய்யப்பட்ட 3 பிராணயாமங்கள் மேலான தபஸு என்று கொள்ளவேண்டும். உலையில் வைத்து ஊதப்பட்ட உலோகங்களில் மலங்கள் எப்படி எரிக்கப் படுகின்றனவோ அப்படியே இந்திரியங்களின் தோஷங்களெல்லாம் பிராணயாமத்தால் எரிக்கப்படுகின்றன. வ்யாஹிருதி ப்ரணவங்களோடு கூடிய 16 பிராணயாமங்கள் தினம் தவறாமல் ஒரு மாதம் செய்யப்பட்டால் பிரம்மஹத்தி பாபம் செய்தவனையும் பரிசுத்தமாக்கி விடுகின்றன.

சௌனகர் சொல்லுகிறார்:—ஏகாக்ர சித்தமுடையவனாய் விதிப்படி மூன்று பிராணயாமங்கள் செய்தால் ஒரு அஹோராத்ரத்தில் செய்த பாபம் உடனே நசித்து விடுகிறது. 12 பிராணயாமங்களால் ஆத்மசுத்தி வருகிறது. 24 பிராணயாமங்களால் மஹா தேஜஸ்வி ஆகிறான்.

யமன் (என்கிற ஸ்மிருதி கர்த்தர்) சொல்லுகிறார்:—பத்து ப்ரணவங்களோடு கூடியதான 4 பிராணயாமங்கள் 14, ஒரு மாதம் விடாமல் செய்தவன் பிரம்மஹத்தி உபபாதகங்கள் இவற்றிலிருந்து விடுபடுகிறான். (பிராணயாம மந்திரத்தில் பிரணவோச்சாரணம் பத்துமுறை செய்யவேண்டி வருகிறது.)

வ்யாஹிருதி, ப்ரணவத்தோடு கூடிய காயத்ரியை, சிரஸ் என்னும் மந்திரத்தோடு எப்பொழுதும் (தினம் தவறாமல்) எவர் ஜபிக்கின்றாரோ அவர்க்கு ஓரிடத்தும் பயமில்லை.

யாஞ்ஞவல்கியர் சொல்லுகிறார்:—எவனொருவன் இப்பொழுது சொல்லிய ஏழு வ்யாஹிருதிகளைக் கும்பகத்தோடு ஸ்மரிக்கின்றானோ அவனால் ஏழு உலகங்களும் உபாஸிக்கப் பட்

† "ச்வேதச்யாம பீதபிசங்க லோஹித நீல கனகவர்ணா:" என்றபடி அவைமுறையே வெளுப்பு, கறுப்பு, மஞ்சள், பிங்களவர்ணம், செகப்பு, நீலம், ஸ்வர்ணவர்ணம் என்கிற நிறத்தோடு கூடியவை.

டவைகளாய் ஆகின்றன. அவ்வெல்லா உலகங்களிலும் சுவேச்சா ஸஞ்சாரம் ஸம்பவிக்கிறது. 16 அட்சரங்களையுடைய மந்த்ரமானது காயத்ரி சிரஸ—என்று சொல்லப்படுகிறது. அதை ஒரு தரம் ஜபித்த பிராஹ்மணன் ஸம்ஸாரத்திலிருந்து கூட விடுபடுகிறான்.

* * * *

இங்கே ஜபம் என்பதற்கு அர்த்தம் "ஜந்ம கர்மஹரோயஸ்மாத் தஸ்மாஜ்ஜப இதிஸ்மிருத:" என்னும் வாக்கியத்தைக் கொண்டு அர்த்தம் செய்துகொள்ள வேண்டியது. "ஜகாரோஜந்மவிச்சேத: பகார: பாபநாசந:" ஜந்மத்தையும் பாபத்தையும் போக்குவது எதுவோ அது ஜபம். அந்த ஜபம் "மந்திரங்கள் உம்மூளே மதித்த நீரு மும்மூளே" யென்றபடி ஆந்தரத்தியான ஸித்தி ரூபமாயுள்ளது.

ஸப்த வ்யாஹிருதிகளைக் கும்பகத்தோடு (அதாவது அஜபமாக) த்தியானம் செய்வதால் ஸப்த லோகங்களின் ஞானமும் ஸப்தலோக ஸஞ்சாரமாகிய அனுபவமும் ஸித்திக்கிறது என்பது யோகயாஜ்ஞவல்கியருடைய அனுபவ வாக்காயிருக்கிறது. ஸப்தலோக ஸஞ்சாரம் ஸித்தித்தவனுக்கு ஸப்த லோகங்களையும் தேஹமாகக்கொண்டு அந்த லோகங்களுக்கெல்லாம் அந்தர்யாமியாயும் அவைகளை அதிக்கிரமித்தவளாயு மிருக்கிற அதிஷ்டான தேவதையாகிய காயத்ரீ தேவதையின் தரிசனம் ஸித்திக்குமென்பது ஆன்றோர் அனுபவ உறுதி.

இப்படி ஸப்தவ்யாஹிருதிகளையும் ஜபித்து ஸப்தலோக ஸஞ்சாரம் சித்திக்கப்பெற்ற அறிஞர் அக்ஷரஸ்வரூபியும் "பிரஹ்மஸம்மிதம்" என்றதனால் பிரஹ்மத்துக்கு ஸமானயானவளுமான "ஓஜோஸி" முதலான மந்திரங்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட வரதைபான காயத்ரீ தேவியின் தரிசனம் செய்து கொண்டிருப்பர். இப்படி ஸதா காயத்ரீதரிசனம்செய்து கொண்டு அந்த பிரஹ்மதேஜஸீயானவர்களான சேதனர் (அறிஞர்) ஸதா புகழ்கின்ற உண்மையான சோதியை யாவனொருவன் தியான யோகத்தால் நிதித்தியாஸனம் செய்து தியேயாகாரஸித்தி விசேஷத்தால் அந்தச் சோதியை அருந்தினவனோ அவனே அவன் காயத்ரீசரீரத்தை யுணர்ந்தவனாய் அந்த சரீரத்தையுமதிக்கிரமித்திருக்கும் காயத்ரீ சிரஸைத் தியானம் செய்ய அருகனும் அதிகாரியும் ஆகிறான்.

இந்த காயத்ரீ சிரஸானது 16-அக்ஷரங்களையுடைய மந்திரமாயிருக்கிறதென்று யோகயாஜ்ஞவல்கியர் சொல்கிறார். சோடசாக்ஷரம் பொருந்தினதாய் (16 நித்ய கலைகளால் பூரணமானதாய்) ஷோடசீ மந்திரத்துக்கு சாமானமானதாய் விளங்கும் இந்த காயத்ரீ சிரஸை காயத்ரீ தரிசனம் பெற்ற எவனொருவன் (அதாவது, காயத்ரீ மந்திர திருஷ்டாவான எவனொருவன்) ஸங்கல்ப விகல்பமற்று (சித்த விருத்தி நிரோதமான உந்மநவினால்) ஒருதரம் யோக ஸம்யம ஸித்திடால் ஜபிக்கிறானோ (அஜபா என்று சொல்லும் நிர்விஷய மநவினால் தியானம் செய்கிறானோ) அவன் (அந்த மந்திர திருஷ்டாவாகிய காரணத்தினால்) உடனே (எதனாலும் தீராத) ஸம்ஸாரமாகிய துக்க ஸாகரத்திலிருந்து கரையேறினவனாகிறான் என்று யோகயாஜ்ஞவல்கியர் சொல்கிறார். "ஸம்ஸாரத்திலிருந்து கூட" என்றதனால் ஸம்ஸார நிவிருத்தியின் அருமையும் ஷோடசாத்மகமான காயத்ரீ சிரஸின் பெருமையுங் கூறப்பட்டது, இது அன்றும் இன்றும் என்றும் உண்மையே யென்பதற்கு ஸ்வானுபவச் செல்வர்களெல்லோரும் சாக்ஷிபகர்வார்கள்.

நவராத்திரி பூஜா விசாரணத்தில் (அக்டோபர் மாதத்து விவேகசிந்தாமணியைப்பார்க்க) "காயத்ரீ மார்க்க தரிசனம்" என்னும் தலைப்பின் கீழ் சொல்லியிருக்கிற அஜபாகாயத்ரீ, துரீயகாயத்ரீ யென்னும் பாடல்களிரண்டையும் கவனித்துப் பார்க்க இதனுண்மை விளங்கும்.

அஜபாகாயத்ரீ

"எங்குநிறையுன்வடிவையுள்ளத்திருத்திக்
கங்குல்பகலறவாடுநல்லரவையெழுப்பியுன்
அங்குசபாசத்தால்ஐந்தொடுநாலையுமறப்படுத்தி
துங்கமுறவெங்குநிறையாலயங்கடந்து
பங்கமிலாதெங்குநிறை யம்பரத்தூடுபோய்—"

என்றதனால் காயத்ரீதரிசனமும் பின்வரும் துரீய காயத்ரீ மந்திரத்தால் காபத்ரீ சிரஸின் ஜபபலனான துரீய காயத்ரீ தரிசனமும் கூறப்பட்டுள்ளது.

துரீய காயத்ரீ

"மாதவர்புகழாறுமாநிலங்கடந்து
யாதவர்புகழ்மந்தைமாவெளிகடந்த
சேதனர்புகழுண்மைச்சோதியையருந்தி
வேதனைக்கெட்டாதவீட்டுச்சிபட்டுன்.
நாதனைக்கண்டிறங்கநல்யோகியாமே."

இதனால் சிவயோக மாகிய நல்யோகம் கூறப்பட்டது. பிரணவத்தோடு கூடிய வியாஹிருதிகள், காயத்ரீ, காயத்ரீசிரஸ் ஆகிற இம்மூன்று பாதங்களையும் உபாஸித்துண்மையுணர்ந்தவர்கள் அகார, உகார, மகாரரூபமான பிரணவோபாசனையின் பலனையே பெறுகிறார்களென்பது ஸித்தாந்தமான உண்மை. "வேதாந்த ஸித்தாந்த ஸமரஸ நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணம்" சாக்ஷியாக இது ஸத்யம், ஸத்யம், ஸத்யம்.

ஓம்தத்ஸத்.

---

## The King Emperor's Coronation Durbar Address.

### காரனேஷன் தர்பாரில் சக்ரவர்த்தியார் கூறிய திருவாக்கு.

(*)

ஹிந்து, பகம்மதிய, மொகலாய அரசர்கள் தலைமை ஸ்தானமாய்க் கொண்டு ராஜ்யபாரம் பண்ணிவந்த அஸ்தினாபுரமென்னும் டெல்லிமா நகரத்தில் இம்மதி 12உ மிகவும் விமர்சையாய், நம்பாட்கிமை தங்கிய சக்கிரவர்த்தியாரின் கிரீடதாரண மகோத்சவம்நிறைவேறிற்று. அங்கிருந்து வரும் தந்திச் செய்திகளைக் கவனிக்கும்போது இது பரியந்தம் இந்தியாவில் எவரும் கண்டிராத மனோஹரமான காட்சியே அந்த நகரத்தில் உருவெடுத்து வந்ததோ என்னவோ என்று சொல்லும்படி கூடத் தோன்றுகின்றது. ஜனசமூகமே ஸாகரம்போல் நாற்புறங்களிலும் நின்று சக்கிரவர்த்தியாரின் முடிசூட்டலைக்கண்டு மனமகிழ்ச்சி கொண்டிருக்குமச்சமயத்தில் தம்முடைய ஏகசக்கிராதிபத்தியத்தின் கீழ் லக்ஷக் கணக்கான பிரஜைகள் புன்சிரிப்புடனும் ஆவல் மிகுந்து தம்மை நோக்கியவாறு இருக்கும்போது அது எவ்வளவு தூரம் கருணைக்கிடங் கொடுக்கும் பாருங்கள். ஜாதி, மதம், நிறம்முதலான வித்தியாசங்களைக் கவனியாமலே தமது ஆட்சிக்குட்பட்ட அபிமானங் கொண்ட குடிகள் என்பதை அரசருணர்ந்துவிட்டால் அதனிலும் திருப்தியைக் கொடுக்கக் கூடியது வேறென்னை? பாராளும் மன்னரிடமிருந்து நாம் எவ்வளவு எதிர்பார்த்தோமோ அதற்கு மதிகமாகவே நமக்குப் பலன் கிட்டிவிட்டது. தர்பாரில் இம்மதி 12உ மங்களவார தினத்தில் கூடியிருந்த ஜனங்களைப் பார்த்து அவர் மொழிந்த திருவாக்கே நாம்மேலே சொல்லியதற்கு அத்தாட்சியாகும்.

சக்ரவர்த்தியார் சிறப்புடன் விளங்கும் தர்பார் மண்டபத்தில் தம் சக்கிரவர்த்தினி சமேதராய் ஸ்வர்ண வஜ்ஜிர வைடூர்யங்களினால் இழைக்கப்பெற்ற வெள்ளி சிம்மாஸனங்களில் வீற்றிருந்ததை வருணிப்பது நேரிற்பார்த்தவர்களுக்கே இயலுமன்றி மற்றெவர்க்கும் இயலாது. சக்ரவர்த்தியார் திருவுளமிருந்து தர்பாரில் மகா ஜனங்கள், துருப்புகள், இந்திய மன்னர்கள், பிரதிநிதிகள் முதலினோர் கூடிப்புடைசூழ்ந்து நிற்குமச்சமயத்தில், வெடிகள் தீர கரகோஷம் கோஷிக்க, பாண்டு வாத்தியம் முழங்க, அதன் மத்தியில் சக்கரவர்த்தியார் தர்பாரை யாரம்பிக்க ஆஜ்ஞாபித்துப் பின் தாமெழவே, ஜனங்களெல்லோரும் அரசரது திருவாக்கிலிருந்து வரப்

போவதைக் கேட்கும் ஆவலோடு மௌனமாயிருக்க, சக்கிரவர்த்தியார் அடியிற் குறிப்பிட்டவாறு பேசினர்:—

"இன்று இங்கே உங்கள் மத்தியில் நான் நிற்பது எனக்கு உண்மையான திருப்தியையும் நன்றியுணர்ச்சியையும் கொடுக்கின்றது. இந்த வருஷமெல்லாம் மகாராணி சக்ரவர்த்தினிக்கும் எனக்கும் அநேக பெருஞ் சடங்குகளும் எப்போதுமில்லாத உழைப்பும் பளுவாயிருந்த போதிலும் அதனல் எனக்கும் சந்தோஷமே உண்டாயிற்று. இந்தியாவை முன்னொரு தடவை வந்து பார்த்து அதன் ஞாபகம் எங்கள் மனதில் நன்றியை யுண்டுபண்ணி அப்போது இந்த தேசத்தை நாங்கள் அன்புடன் சிந்திக்கத் தெரிந்து கொண்டோமாதலால், காலத்தையும் தூரத்தையும் பாராமல் மறுபடியும் வந்து பார்க்க உற்சாகமுண்டாயிற்று. இங்கிலாந்திலிருந்து இந்த நீண்ட யாத்திரை செய்ய திவ்யமான எண்ணங்களோடு புறப்பட்டோம். இங்கே வந்த பிறகு எங்கள் சொந்த தேசத்து அன்பைப்போல இங்கும் அன்பு பாராட்டப்படுகின்றது. இப்படிச் செய்ததனல் சென்ற ஜூலை மாசம் தெரிவித்த செய்தியில் கண்ட விருப்பப்படி நடித்திருக்கிறேன். அந்தச் செய்தியில் இங்கிலாண்டில் வெஸ்டமினிஸ்டர் ஆலயத்தில் நான் செய்துகொண்ட மகுடாபிஷேகத்தை நேரில் உங்களுக்கு அறிவிப்பேன் என்று விளம்பாப் படுத்தினேன். அப்போது கடவுள் கிருபையால் என் முன்னோர்கள் தரித்த கிரீடமானது சகலஉற்சவச்சின்னங்களுடன் பழமையான சம்பிரதாயப்படி என்சிரசில் வைக்கப்பட்டது. மகாராணிச்சக்ரவர்த்தியுடன் நான்இங்கே வந்து இந்தியாவிலிருக்கும் பக்தியுள்ள மன்னவர்களுக்கும் விசுவாசமுள்ள ஜனங்களுக்கும் எங்களுடைய அன்பைக் காட்டக் கவலை கொண்டிருக்கிறேன். இந்திய சத்ராதிபத்தியத்தின் க்ஷேமமும் சந்தோஷமும் எங்கள் இருதயத்துக்கு எவ்வளவு அருமையென்பதைக் காட்டவும் கவலைகொண்டிருக்கிறேன். என்னுடைய மகுடாபிஷேகக் கொண்டாட்டத்திற்கு வர இயலாதவர்களை டெல்லிமாநகரத்தில் சேர்த்து அந்தக் கொண்டாட்டத்தில் பங்கு பெறச் செய்யவும் விரும்புகிறேன்.

"இந்தப் பெருங் கூட்டத்தைப் பார்க்க எனக்கும் சக்கரவர்த்தினிக்கும் உண்மையான சந்தோஷமும் திருப்தியும் உண்டாகின்றன. என்னுடைய கவர்னர்களையும், நம்பிக்கை பெற்ற உத்தியோகஸ்தர்களையும், என்னுடைய மேலான மன்னர்களையும், ஜனப்பிரதிநிதிகளையும், என் இந்திய சமஸ்தானங்களைச் சேர்ந்த ராணுவங்களின் டெபுடேஷன்களையும், இந்தக் கூட்டத்தில் பார்த்துச் சந்தோஷமும் திருப்தியும் அடைகின்றேன். அவர்கள் எனக்கு பக்தியுடன் செலுத்த விருப்பும் சேவாஞ்சலியையும் நிஷ்டையையும் மனப்பூர்வமான திருப்தியுடன் நான் நேராகப் பெறுவேன். சரித்திரத்தில் நிலை பெறக்கூடிய இந்த சமயத்தில் மன்னர்களும் ஜனங்களும் ஒற்றுணர்ச்சியையும் அன்புவாய்ந்த நல்லெண்ணத்தையும் பாராட்டி என்னோடு ஒன்றாகச் சேர்ந்திருக்கிறார்களென்ற எண்ணம் என்மனதில் ஆழப் பதிகின்றது. இந்த உணர்ச்சிகளுக்கு அறிகுறியாக என்னுடைய விசேஷ தயவையும் மதிப்பையும் காட்டும் குறிகளால் என்னுடைய மகுடாபிஷேக சம்பவம் ஞாபகத்தி லிருக்கும்படி செய்ய விரும்புகிறேன். இன்று இன்னும் சில நேரம் பொறுத்து இவைகள் இன்னவையென்று இந்தக் கூட்டத்துக்கு என் கவர்னர் ஜெனரலைக் கொண்டு சொல்லுவிப்பேன். முடிவில் என்னுடைய பூஜியர்களான மூதாதைகளால் உங்களுடைய சுதந்திர பாத்தியங்களைக் காப்பதாகச் செய்த உறுதிகளை நான் புதிப்பிக்க இந்த சமயம் வாய்த்ததென்று நான் சந்தோஷப்படுகிறேன். உங்களுடைய க்ஷேமம், அமைதி, திருப்தி இவைகளைப் பற்றியும் நான் கொள்ளும் கவலையைத் தெரி

விக்கச் சமயம் நேரிட்டதென்றும் சந்தோஷப் படுகிறேன் என்னுடைய பிரஜைகளுக்குக் காவலாய்க் கடவுள் அருள் இருந்து அவர்களுடைய சந்தோஷத்தையும் வளப்பத்தையும் முற்படுத்த என்னுலியன்ற முயற்சியில் உதவி புரிவாராக. இங்கிருக்கும் சமஸ்த மன்னர்களுக்கும் பிரஜைகளுக்கும் எங்களுடைய அன்புவாய்ந்த வாழ்த்துக்களைச் செய்கிறோம்."

இந்தியாவுக்கு வந்து தம்மில் விசுவாசம் கொண்ட இந்தியப் பிரஜைகளின் மத்தியில் தாம் சக்கிரவர்த்தியென மகுடாபிஷேகம் செய்துகொள்ள வேண்டுமென்று அவருக்கு அபிலாஷை ஏற்பட்டதற்கு இந்தியரிடத்திலுள்ள அன்பே காரணம். வேல்ஸ் இளவரசராயிருந்தபோது இவர் இங்கு விஜயம் செய்திருந்த காலத்தில் ஹிந்து மஹாஜனங்கள் அன்னாரிடம் காட்டிய ராஜபக்தியும் ராஜவிசுவாஸமும் மனப் பூர்வமானவை என்றே அவர் மனதில் பட்டது. அவர் இந்தியர்களை வேறு தேசஸ்தர் என்ருவது அந்நியரென்ருவது கருதவேயில்லை. இங்கிலாந்திலுள்ளவர் தம்மை எப்படி அரசரென்று பாவிக்கிருரோ அதுபோலவே இந்தியப் பிரஜைகளும் தம்மை அரசராகக் கொண்டாடும்போது அவர்களுக்கும் இவர்களுக்கும் வித்தியாச பேதமிருப்பதாகக் கருதுவது உசிதமாகுமா? உசிதமாகாதென்பதை சக்கிரவர்த்தியாரவர்கள் நிச்சயித்து இந்து மகாஜனங்களுக்கும் தம்மிடம் அன்பு பூண்ட இந்தியச் சிற்றரசர்களுக்கும் தம்முடைய பிரேமையைத்தெற்றெனப் புலப்படுத்தவே சக்கிரவர்த்தியாரவர்கள் இந்த தர்பாரை நடத்த இசைந்தார். தாம் இந்தியாவுக்கு வந்து மகுடாபிஷேகம் செய்துகொள்ள வேண்டுமென்ற விருப்பத்தை இங்கிலண்டில் வெளியிட்டபோது இதென்ன வழக்கமென்று சிற்சிலர் பலவிதமான ஆக்ஷேபங்கள் சொல்லிப்பேசினர்கள். ஆனல் அஃதெதற்கும் சலியாமல் இந்தியாவில் கிரீடதாரணம் செய்துகொள்ளவேண்டும், இந்தியர்க்கு நமது திருவுளத்தைத் தெரிவிக்கவேண்டும், இந்தியர்க்கும் க்ஷேமமுண்டாகட்டும் என்று தாம் கோருவதாக அவர்களறியட்டும், என்னும் இவ்வுன்னதமான உத்தமசிந்தை கொண்டவராய்த் தாம் விஜயஞ் செய்ததாக தமது திருவாக்கினலே மொழிந்தருளினர். கடைசியில் தம்மை அண்டி நிற்கும் குடிகள் சுகஜீவனஞ் செய்யுமாறும் அதிவிஷயமாய் தாம் அவர்களுக்குப் பேருதவி செய்வதிலும் கிருபை புரியவேண்டுமென்று எங்கும் நிறைந்த கருணாஸாகர மூர்த்தியான ஸர்வேசுவரனைப் பிரார்த்தித்து சக்கிரவர்த்தியாரவர்கள் தர்பாரை முடித்தார். இவ்வளவு சுபசூசகங்களோடு கூடின இந்த தர்பாரை இந்தியர்கள் மறப்பார்களா? இது நம்மவருடைய மனதில் பசுமரத்தாணிபோல் பதிந்து பாரம் பர்யமாய் நம்பின் வரும் ஸந்ததியால் படித்துப் போற்றும் சரித்திர விஷயங்களில் ஒன்ருய்ப் பிரகாசிக்குமென்பது எமது துணிபு.

ல. அநந்தய்யர்.

—(:-:)—

## Coronation Boons.
## முடிசூட்டு நன்கொடைகள்.

டில்லிமாநகரில் நடைபெற்ற மகநீயமான முடிசூட்டு மகோற்சவம் எந்நாளும் ஜனங்களுடைய மனவிலிருந்து மறையாதிருக்கும்படி மகாராஜா சக்கிரவர்த்தியவர்களால் தர்பார் முடிவில் நன்கொடைகள் இந்தியப் பிரஜைகளுக்கு அளிக்கப்பட்டன. நன்கொடைகள் என்ருல் ஒன்ரு, இரண்டா, அல்ல, பல நன்கொடைகள் கொடுபட்டிருக்கின்றன. இதைக் கேட்கும் ஜனங்கள் ஆனந்த பரிபூரிதமடைந்து ஆங்காங்கு குதூஹலங்கொண்டிருக்கிருர்கள். அந்த நன்கொடைகள் இன்னின்னவை யென்று சுருக்கமாய் இதனடியிற் சொல்லுவோம்.

படிப்புக்காக 50 லட்ச ரூபா.

தேசத்தில் கல்வி விருத்தியாகவேண்டுமென்று மிஸ்டர் கோபால கிருஷ்ண கோகலே

போன்ற பிரமுகர்கள் பாடுபட்டுவருவது நமது நண்பர்கள் உணர்ந்த விஷயம். மற்றும் ஆங்காங்குள்ள சமூகத்தவரும் தேசாபிவிருத்திக் கெடுத்தது படிப்பே யாதலால் அது விஷயத்தில் இன்னும் சௌகரிய மிருக்கவேண்டுமென்றும், அவ்விதம் சௌகரியம் இருக்க வேண்டுமானால் அதற்கு முக்கியமாய் வேண்டுவது பணமே யென்றும் அபிப்பிராயப் பட்டிருந்தார்கள். அதற்கிணங்கவே சமயம் எப்போது கிட்டுமென்று பிரஜைகள் பேராவல் கொண்டிருந்ததற் கிணங்க மகாராஜா சக்கரவர்த்தியாரவர்கள் கல்விக்குப் பணம் அளிக்கவேண்டு மேன்னும் இஷ்டத்தின்படியே, இந்தியா மந்திரியாரின் சம்மதமும் ஏற்று, இதன் பொதுவான நன்மையையும் கருதி பொது ஜனங்களுடைய புத்தி விசாலிக்குமாறு கல்வி கற்பிப்பதன் நிமித்தமாய் 50 லட்ச ரூபா தனியே யெடுத்துவைக்க கவர்ன்மெண்டார் ஆலோசனை செய்திருக்கிறார்கள். இத்துடன் பிரதி வருஷத்திலும் கல்வியபிவிருத்திக்காக விசேஷ பணமும் உபகரிக்கப் படும்.

### அரைமாதச் சம்பளம் இனாம்.

இராஜ சக்கரவர்த்தியவர்களுடைய கடற்படை, தரைப்படை யாட்களின் நன்றியும் பக்தியும் மிகுந்த வேலையைக் கருதி மாதம் 50 ரூபா சம்பளத்துக்கு மேற்படாதவர்களுக் கெல்லாம் அரைமாதச் சம்பளம் இனாம். இதோடு கூட கவர்ன்மெண்ட் சிவில் சர்விஸிலுள்ளவர் தத்தம் பொறுப்புள்ள கவலைகளை விசுவாஸத்துடன் நிறைவேற்றி வருவதை நன்மதித்து மாதம் ஐம்பது ரூபாய்க்கு மேற்படாத பர்மனென்ட் (காயமான) உத்தியோகஸ்தர்களுக் கெல்லாம் அரைமாதச் சம்பளம் இனாம் கொடுக்க வேண்டுமென்று சக்கரவர்த்தியார் ஆக்ஞை பண்ணியிருக்கிறார்.

### இந்தியர்ளுக்கு "விக்டோரியா கிராஸ்"

இது முதல் சக்ரவர்த்தியாருடைய இந்திய சைனியத்தில் ஆட்களாயும் ரிஸர்வ்களாயும் உள்ளவர்களும் ராயல் நேடிவ் ஆபிஸர்களும் சௌரியத்தின் பொருட்டு "விக்டோரியா கிராஸ்" என்ற அந்தஸ்து பெற உரியவாகளாவார்கள் என்றும், இராஜ சக்ரவர்த்தியின் முடிசூட்டு தர்பாராகிய இது முதல் 10-வருஷத்தில், "ஆர்டர் ஆப் பிரிடிஷ் இந்தியா" மெம்பர்கள் முதல் வகுப்பில் 52-பேர் அதிகமாகும்படி செய்வதோடு, இக் கொண்டாட்டங்களின் அறிகுறியாக, புதியவாய் முதல் வகுப்பில் 15-ஸ்தானங்களும், இரண்டாவது வகுப்பில் 19-ஸ்தானங்களும் உடனே ஏற்படுத்தப் படுமென்றும், இதுமுதல் எல்லைப்புற மிலிஷியா படையையும் மிலிடெரி போலீஸையும் சேர்ந்த இந்திய ஆபீஸர்கள் மேற்சொன்ன அந்தஸ்தைப் பெற அருகர்களாவார்க ளென்றும், நெடுங்காலம் கௌரவத்துக்குரிய விதமாய்ச் சேவகம் செய்து, இராஜசக்ரவர்த்தியின் இந்திய சேனையில் நேடிவ் ஆபீஸர்களா யுள்ளவர்களுக்கு, அவரவர்களுக்குத் தக்கபடி, ஸ்பெஷலாக நிலமோ நிலவரி வருமானமோ, இனாம் கொடுத்து, அல்லது நிலவரி தள்ளுபடி செய்து சன்மானம் செய்யப்படுமென்றும், இந்தியன் - ஆர்டர் ஆப்-மெரிட்டில் உள்ளவர்களில் மரணம் நேர்ந்தால், மரித்தவரின் மனைவிக்கு மூன்று வருஷங்களுக்கு ஸ்பெஷல் அலவென்ஸ் கொடுப்பதாக இப்போதிருப்பதை மாற்றி, இந்த தர்பார் முதற்கொண்டு, அப்படி புருஷனையிழந்த ஸ்திரீகளுக்கு, அவர்கள் இறக்கும் வரையில், அல்லது மறுவிவாகம் செய்துகொள்ளும் வரையில் அந்த அலவன்ஸ் கொடுக்கப் படுமென்றும் இராஜ சக்கரவர்த்தி நியமித்திருக்கிறார்.

### பட்டம் பெற்றோர்களுக்கு அடையாளக் குறிகளும் கலைவல்லோர்க்குப் பென்ஷனும்.

திவான் பகதூர், ஸர்தார் பகதூர், கான் பகதூர், ராய் பகதூர், கான்சாகிப் ராய்சாகிப் ராவ்சாகிப் ஆகிய பட்டங்களைப் பெற்றுள்ளவர்களுக்கும் இனிப் பெறப்போகிறவர்களுக்

கும் கௌரவத்துக்கும் மதிப்புக்கும் அறிகுறியாக அவரவர்களுக்குத் தக்கவாறு, அடையாளக் குறிகள் கொடுபட வேண்டும் என்றும், மஹா மகோபாத்தியாயர், ஷாம்ஸ்உல் - உல்ம என்னும் பயபக்திக்குரிய பட்டங்களை இப்போது பெற்றவர்களெல்லோருக்கும், அல்லது இனிப் பெறுவோர்களிற் சிலருக்கு, இந்தியாவின் புராதன கலையின் புகழை உத்தேசித்து, வருஷவாரி பென்ஷன் கொடுக்கப்பட வேண்டுமென்பதும் சக்கரவர்த்திபெருமானின் கருணையான ஆக்ஞை.

வடமேற் கெல்லைப் புறத்தில் பூதானம்.

இந்த தர்பார் ஞாபகார்த்தமாகவும், பொது சேவகத்தில் சிறந்திருப்பதை யுத்தேசித்தும், வடமேற் கெல்லை மாகாணத்திலும் பலுசிஸ்டானிலும் நிலங்கள் வரியின்றி, கொடுக்கப் பெற்றவர் தம் ஜீவியகால முழுதுமோ அவர் ஜீவியகாலத்துக் கப்புறமும் இன்னொருவர் ஜீவியகால முழுமையுமோ லோகல் கவர்ன்மெண்ட் இஷ்டப்படுகிறபடி, அல்லது கவர்ன்மெண்ட் இப்போது கைப்பற்றியிருக்கும் நிலங்கள் மறுபடி கொடுத்து விடப்படும்.

"நாஜரானு" இனிச் செலுத்தவேண்டாம்.

தம்முடைய ராயல் இந்தியன் பிரின்ஸ்களின் க்ஷேமத்தைப் பெருமனதுடன் கோரி, அவர்களின் தேச ஆதிக்கத்துக்குப் புதிதாய் ஒருவர் வரும்தோறும் செலுத்த வேணடிய 'நாஜரானு' தொகை இனிச் செலுத்தப்பட வேண்டியதில்லை யென்றும், நியாயாதிகாரம் பெறாத கத்தியவார் குஜராத் ஆகிய பிரதேசங்களிலுள்ள சிறு ராஜ்யங்களும், மீவாரில் பூமியா சீப் (Chief) களும் கவர்ன்மெண்டுக்குக் கொடுக்க வேண்டிய சில்லரைக் கடன்கள், இந்தியாக் கவர்ன்மெண்டின் உத்தரவுப்படி முழுமையுமோ ஒரு பாகமோ, தள்ளுபடி செய்யப்படுமென்றும், இம்பீரியல் சர்விஸ் துருப்புகளைக் கௌரவிக்கும் பொருட்டு பிரிடிஷ் இந்தியா ஆர்டரில் (அந்தஸ்தில்) சில அதிகஸ்தானங்கள் ஏற்படுத்தப்படும்.

கைதிகள் விடுதலை.

இராஜ-சக்ரவர்த்தி கிருபையையும் இரக்கத்தையும் மேற்கொண்டு, இப்போது குற்றங்கள் (Crimes and misdemeanours) செய்து சட்டப்படியுள்ள தண்டனையை அனுபவிக்கும் சில கைதிகளைச் சிறையினின்று விடுவிக்கும்படியும், சிறுதொகை கடன் பட்டவராயும் மோசஞ் செய்யாது ஏழைமையால் சிறைப்பட்டவராயுமுள்ள சிவில் கடன்காரர்களெல்லாரையும் விடுவித்து, அவர்கள் பட்ட கடன்களை (கவர்ன்மெண்ட்) கொடுத்து விடும்படியும் உத்தரவிடத் திருவுளங் கொண்டிருக்கிறார்.

வங்காள மாகாண பிரிவினை ரத்து.

தர்பார் முடிவு நேரத்தில் சக்கரவர்த்தியார் தம் மந்திரிகளுடையவும் கவர்னர் ஜனரலுடையவும் ஆலோசனையை முன்னிட்டு, வங்காள மாகாணத்திற்கு ஒரு கவர்னரும், பீஹார், சோடாநாக்பூர், ஒரிஸ்ஸா இவைகளுக்கு ஒரு லப்டினெண்ட கவர்னரும், ஆஸாமுக்கு ஒரு சீப்கமிஷனரும் நியமிக்கப் படுவார்களென்றும், இவைகளுக்குரிய எல்லைகளை இந்தியா மந்திரியாருடைய அங்கீகாரத்தின் பேரில் கவர்னர் ஜனரல் வேண்டிய நிருவாக ஏற்பாடுகள் செய்வாரென்றும் திருவுளஞ் செய்தார். இதைக் கேட்கும் வங்காளியர் இருதயங்கள் ஒவ்வொன்றிலும் குதூஹலமும் ஆரவாரிப்பும் நிரம்பியிருக்குமென்பதற்குத் தடையென்ன?

இனி இந்தியா கவர்ன்மெண்டின்
தலைமைஸ்தானம் டில்லி தான்.

இது பரியந்தம் இந்தியாவுக்குப் பிரதான பட்டணமாயும் ராஜப்பிரதிநிதியின் ஸ்தானமாயுமிருந்தது கல்கட்டா, இனி தமக்கு மகுடாபிஷேகமான இந்த டில்லிமா நகரமே இந்தியாவின் பிரதானபட்டணமாயிருக்கவேண்டுமென்றும், அதுவே ராஜப்பிரதிநிதியின் மத்

தியஸ்தானமா யிருக்கவேண்டுமென்றும் ஆக்கியாபித்தார்.

மேற்சொன்னவை எந்தெந்த நிபந்தனைக் குட்பட்டுச் செய்யப்படுமென்பது இனி வெளிப்படுத்தப்படும்.

இராஜ சக்கரவர்த்தியை கடவுள் காப்பாராக.

சக்கரவர்த்தியாருடைய ஆக்ஞைப் பிரகாரம் மகா ஜனங்களுக்கு ராஜப்பிரதிநிதியார் மேற்சொன்ன முடிசூட்டு நன்கொடைகளையும் தர்மங்களையும் தெரிவித்தார். அதைக்கேட்டு அவர்கள் ராஜதம்பதிகளுக்கு சமஸ்தமங்களமும் உண்டாகட்டுமென்று மனம்பூரித்துக் கடவுளைப் பிரார்த்தித்து வாழ்த்தினார்கள். இந்த மஹத்தான டில்லிதர்பார் இப்படியாக ஸர்வமங்களமனோகரமாய் முடிந்தது.

---

## His Majesty's Reply to the Madras Address.

## சென்னை இராஜதானியார் விக்ஞாபனத்திற்குச் சக்ரவர்த்தியார் அளித்த பதில்.

---

டெல்லி முனிசிபாலிடியாரும் சென்னை இராஜதானியாரும் முறையே இரண்டு டிபுடேஷன்கள் மூலமாய் டெல்லியில் நம்மாட்சிமை பொருந்திய சக்கிரவர்த்தி யாருக்கு விக்ஞாபனம் செய்து கொண்டார்கள். நம்சென்னை மாகாணத்தைப் பொறுத்த மட்டில் சக்கரவர்த்தியார் கொடுத்தருளிய பதிலை இதனடியிற்காண்க. ஜனங்களுடைய பக்தி விசுவாஸங்களையும் அடக்கம், மரியாதை யிவைகளையும் தெற்றெனப் புலப்படுத்தி வாசிக்கப்பட்ட அந்த விக்ஞாபனத்தில் மகாராஜா சக்கிரவர்த்தியிடம் உண்மையான பிரியமும் பக்தியும் கொண்டிருப்பதைத் தெரிவித்து, இந்த கிரீடதாரணவைபவ மகோற்சவத்தைத் தம் இந்தியப் பிரஜைகளும் கண்டு பரமானந்த மடையட்டும் என்று இங்லாண்டிலிருந்து புறப்பட்டு டில்லிமா நகர்க்கு வந்ததும், ராஜதானி வாசிகளால் சக்கரவர்த்தியின் காம்பீரமான சந்நிதானத்தில் சமர்ப்பிக்கும்படி ஈன்றருளப் பெற்ற விக்ஞாபனத்துடன் சென்ற பிரதிநிதிகளுக்கு (டெபுடேஷனுக்கு) ப்பேட்டி கொடுத்ததும், நம் சக்கரவர்த்தியாருக்கு இந்தியப் பிரஜைகளிடம் இருக்கும் கருணையும் அன்பும் இத்தன்மையவை யென்று காட்டுகின்றன. அவர் நம்மிராஜதானி விக்ஞாபனத்துக்குத் திருவாய் மலர்ந்தருளிய பதிலை மட்டும் ஈண்டு எழுதியுள்ளோம்:—

'சென்னை ராஜதானியின் ஜனங்கள் பேரால் நீங்கள் செய்திருக்கும் பக்தியும் அடக்கமுமுள்ள விக்ஞாபனப் பத்திரத்துக்கு நானும் சக்கரவர்த்தினியும் சந்தோஷப்படுகிறோம். நமது இந்திய சமஸ்தானங்களில் பழய ராஜதானியாகிய சென்னையில் வசிக்கும் ஜனங்களுடைய பக்தியால் எங்கள் மனம் நெகிழ்கின்றது இதில் வசிக்கும் 4 கோடி ஜனங்கள் எங்களிடத்தில் நேரான பிடிப்பிருப்பதைக்காட்ட ஒன்று சேர்ந்ததற்காக நன்றிகொள்கிறோம். தென்னிந்தியாவில் பலஜாதி மதஜன வேற்றுமைகளைக் காட்டிக் கையெழுத்திட்டிருப்பது நீங்கள் எங்களை வரவேற்றதற்கு விலை பெற்ற அத்தாட்சியாகச் சேமிக்கப்படும். இந்தியாவுக்கு இப்போது வந்த சமயத்தைப்பற்றி நீங்கள் சொல்லியிருக்கும் வார்த்தைகளையும் 1906-ம் வருஷத்தில் சென்னையில் நாங்கள் இருந்ததை நீங்கள் பட்சமாய் நினைத்திருப்பதையும் நாங்கள் பூராவாய் அறிகிறோம். எங்களுக்கு அப்போது நீங்கள் செய்த உபசாரத்தை நாங்கள் மறக்கவில்லை. உங்களுடைய பேர்பெற்ற நகரத்தை நாங்கள் திரும்பிப்பார்க்க வேண்டுமென்று நீங்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்குமாறு எங்களுக்கு அவகாசமில்லாததைப்பற்றி நாங்கள் விசனப்

படுகிறோம். இந்திய ஏகாதி பத்தியத்தில் எனக்குப் பிரியமான பாட்டியாரும் பிதாவும் காட்டின ஒற்றுணர்ச்சியையும் தரிசனத்தையும் பற்றி நீங்கள் சொல்லுவதைக் கேட்க எனக்கு ஆழ்ந்த திருப்தி யுண்டாகின்றது. அவர்களுடைய உணர்ச்சி போல என்னுடையதும் இருக்கிற தென்று உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. என் இந்தியப் பிரஜைகளின் க்ஷேமமும் வளப்பமும் என்னுடைய மனப் பூர்வமான கவலைக்கு விஷயங்களா யிருக்குமென்று நான் சொல்ல வேண்டியதில்லை'

இதே காலத்தில் சக்கிரவர்த்தினியாரவர்கள் டில்லி ஸர்க்கியூட் ஹௌஸில் இந்திய ராஜஸ்திரீகளுக்குப் பேட்டி கொடுத்தார்கள். சுமார் நூற்றிருபது ராஜஸ்திரீகள் வந்திருந்தனர். சக்கிரவர்த்தினியோடு கூட லேடிஹார்டிஞ்சும், டவன்ஷைர் டச்சஸும், லேடி மக்மோஹனும் இருந்தார்கள். விஜயம் செய்திருந்த இந்திய ராஜஸ்திரீகளுள் நம்மிராஜதானியைச் சேர்ந்த விஜயநகரம் ராணியரும் ஒருவர் இவர்தம் குழந்தைகள் இரண்டையும் தம்முடைன் அழைத்துச் சொன்றதாகவும், அவர்களைச் சக்கிரவர்த்தினியாரவர்கள் தம் சிம்மாஸனத்தின் கீழாகவே உட்காரும்படி சொன்ன தாகவும் தெரிகிறது. பிறகு விஜயநகரம் ராணியார் சக்கிரவர்த்தினியைப்பார்த்து "இந்த மகோற்சவம்மங்களகரமான தென்றும், இரண்டாம் முறை இந்தியாவுக்கு விஜயம் செய்ய சக்கிரவர்த்தினியார் திருவுளம் பற்றியதற்கு இந்தியமாதர் போதுமான நன்றி செலுத்த முடியாதவர் களாயிருக்கிறார் களென்றும், இந்த மகா ஜனங்கள் மனதில் பிரிடிஷ் ஆட்சியும் மகோன்னத நிலைமையும் பதியும்படியான வைபவத்தோடும் ராஜகம்பீரத் தோடும் கூடிய டெல்லி தர்பாரானது எந்நாளும் யாவரா்லும் கொண்டாடிப் போற்றப்படுமென்றும், சென்ற வருஷம் ஏறக்குறைய இக்காலத்தில் தாம் சக்கரவர்த்தினியாரின் பணிமாதர்களுள் ஒருவராயிருந்து சேவைப்பண்ண வேண்டுமென்னும் அபிலாஷையை லேடி ஹார்டிஞ்சிடம் தெரிவித்தபோது தன் பிரேரேபணை ஒப்புக்கொள்ளப் படவில்லையென்றும், இந்திய மாதர் தம் பக்தி விசுவாஸங்களைத் தெரியப்படுத்திக்கொள்ள ஒரு சமயம் கிடைத்தாலும், அதைக் கொண்டு அவர்கள் சந்துஷ்டியடைவார்கள், என்றும் வெகு சாதுர்யமாய்ப் பேசினார்கள்.

---

## Coronation Honours.

## காரனேஷன் கௌரவப்பட்டங்கள்.

விசேஷ சமயங்களில் வழக்கமாய் வருவது போல இந்தக் காரனேஷன் தர்பார் மகோற்சவத்திலும் முக்கியமா யுள்ளவர்களுக்குக் கௌரவப் பட்டங்கள் அளிக்கப் பட்டன. அவர்களுள் நமது நேயர்கள் அறியக்கூடிய சிலரை மட்டும் இதனடியிற் குறிப்பிட்டிருக்கின்றோம்:-

மரியாதைக் குண்டுகள்.

சிண்டியா மகாராஜா 21-குண்டுகள்; மேஜர் ஜெனரல் மகாராஜா ஸர் சந்திர ஷாம் ஷர்ஜங் நேபாளத்து முதல் மந்திரி 19-குண்டுகள்; பார்வானி சம்ஸ்தானம் ராணாரஞ்சித்சிங் 11-குண்டுகள்; மோகல்லா சுல்தான் 11-குண்டு; காங்கர் சமஸ்தானத்து அதிபர் மகாராஜாதிராஜா கோமல்தாஸ் 9-குண்டுகள்.

"C. I." பட்டம் பெற்ற ஸ்திரீகள்.

லேடி க்ரூ, போப்பால் பீகம், பௌநகர் மகாராணி.

'பாரோனேட்' பட்டம்.

ஆனரபில் ஸர் ஸாஸூன் ஜாகப் டேவிட்.

"G. C. S. I." பட்டங்கள்.

பம்பாய் கவர்னர் ஸர் ஜார்ஜ் கிளார்க்; சென்னைப் பழய கவர்னர் ஸர் ஆர்தர் லாலி, காரொனேஷன் கமிட்டி பிரசிடெண்ட் ஸர்ஜான் ஹியூவெட்; பிகானிர் மகாராஜா; கோட்டா மகாராஜா; ஐதராபாத்து நிஜாம் அரசன்; ஹிஸ் ஹைனஸ் ஆகாகான்; ஸர் ஓமூர் க்ரீ காமாண்டர்-இன்-சீப்.

"C. S. I." பட்டங்கள்.

ராஜப்பிரதிநிதி நிர்வாக சபை மெம்பராகிய மிஸ்டர் சையத் ஆலி இமாம்; சென்னை நிர்வாக சபை மெம்பர் மிஸ்டர் V. கிருஷ்ணசாமி அய்யர்; சென்னை சர்ஜன் ஜெனரல் பான

ர்மான்; நிஜாமின் பிரைவேட் செக்ரிடரி மிஸ்டர் A. M. ஹுஸேன்; பிலாஸபூர் ராஜா; கல்கத்தா பிரசிடென்ஸி காலேஜ் டாக்டர் J. C. போஸ்; வேறு பல ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள்.

"G. C. I. E." பட்டங்கள்.

காஷ்மீர் மகாராஜா; பஞ்சாப் லெவ்டினென்ட் கவர்னர் ஸர் லூயி டேன்; பம்பாய் மாகாணத்தில் கோலாப்பூர் மகாராஜா; பொப்பிலி மகாராஜா; ராஜப்பிரதிநிதி சபை மெம்பர் ஸர் கை ப்ளீட்வுட் வில்ஸன்; உதயப்பூர் மகாராஜா பாட்டியலா மகாராஜா; ராஜா ஸ்ரீ ஸர் ராம வர்மா, கொச்சி; டாக்கா நவாப் ஸர் க்வாஜா சலிமுல்லா; வேறு சிலர்.

"K. C. I. E." பட்டங்கள்.

வெங்காளத்து ஆக்டிங் லெவ்டினன்ட் கவர்னர் மிஸ்டர் பிரடரிக் வில்லியம் டூச்; மைசூர் யுவராஜா ஸ்ரீ கண்டீரவ நரசிம்ம ராஜா; கல்கட்டா மார்டின் கம்பெனியைச் சேர்ந்த மிஸ்டர் ராஜேந்திரநாத் முகர்ஜி; ராஜப்பிரதிநிதிச் சட்ட சபை மெம்பர் மிஸ்டர் கங்காதர மாதோ சிட்னவிஸ்; புனா டாக்டர் ராமகிருஷ்ண கோபால் பந்தர்க்கர்; சென்னை ராஜதானியைச் சேர்ந்த ஜயப்பூர் மகாராஜா ஸ்ரீ விக்கிரமதேவர்; ராஜபுதனத்தைச் சேர்ந்த பிரதாப்கர் மகாராஜா ரகுநாதசிங் பகதூர்; வேறு பல உத்தியோகஸ்தர்கள்.

"நைட்" பட்டம்.

கல்கத்தா ஹைகோர்ட் அஸுடோஷ முகர்ஜி, நாக்பூர் கான்பகதூர் B. S. மேட்டா; பம்பாய் மிஸ்டர் ஜஸ்டிஸ் D. தேவார்; பம்பாய் மிஸ்டர் ஷாபூர்ஜி பர்ஜர்ஜி ப்ரோச்சா, பம்பாய் ராவ்சாகிப் ஸைஜி ட்ரிகாம்ஜி முஜில், பம்பாய் மிஸ்டர் இப்ராகிம் ரஹிம்தூலா, இவர்களும் மற்ற ஆங்கிலேயர்களும்.

"திவான்பகதூர்' பட்டம்.

மிஸ்டர் T. சதாசிவ அய்யர், டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ், C வி. குமாரசுவாமி சாஸ்திரி, ஜட்ஜ் ஸிடி ஸிடி ஸிவில் கோர்ட், கோவிந்ததாஸ் சதுர் புஜதாஸ்காரு, வர்த்தகர், R. R. M. ராமசுவாமி செட்டியார், U. ராமபத்ர நாயுடுகாரு, தொட்டப்ப நாயக்கனூர் ஜமீன்தார், K P. பட்டண செட்டி, மைசூர்.

"ராவ்பகதூர்" பட்டம்.

மிஸ்டர் கே. ராமானுஜாசாரியர், மகாராஜா விஜயநகரம், சே. எஸ். வெங்கடராமய்யர் முனிசிபல் சேர்மன், நாகப்பட்டணம்; எம். ஏ. பார்த்தசாரதி அய்யங்கார், ஹெட் காஷியர், மதராசு பாங்க். என். ரங்கநாதராவ். போலீஸ் டிப்டி சூபரின்டென்டெண்ட், ஆர். வெங்கடரத்னம் நாயுடு, பித்தாபூர் ராஜா காலேஜ்; டி. வி. அநந்தன் நாயர், சப் ஜட்ஜ், தவசிமுத்து ரத்னசாமி நாடார் அப்காரி கன்ட்ராக்டர், தரங்கம்பாடி: எஸ். ராமசாமி அய்யங்கார், சப் ஜட்ஜ், ராஜா தி. ராமராவ், டெபுடி கலெக்டர் ஏ. சி ப்ரணதார்த்திஹர அய்யர், இன்ஸ்பெக்டர் ஆப் ஸ்கூல்ஸ்; ஆர்க்காட் முத்துசாமி சுந்தரமூர்த்தி முதலியார், மைசூர், ஜி கிருஷ்ணமாசாரி பி. எல். ஹைதராபாது, கொர்வண்ட் மத்தண்ண நஞ்சப்பா, காபித் தோட்டக்காரர், குடகு.

'கான்பகதூர்' பட்டம்.

மிஸ்டர் மகம்மது அப்துல் குதூஸ் பாட்சா சாகிப், மதராஸ்; துபாஷ் காதர் சாகிப், ராமநாத புரம்.

'கான்சாகிப்' பட்டம்.

மீர் ரஸியுட்டீன், சால்ட் இன்ஸ்பெக்டர், கம்மாரு இமாம் எட்டீன் சாகிப் அனந்தபூர்; மகமது சாகிப் உட்டீன் சாகிப், ஆர்காட் பிரின்ஸின் திவான்; சர்தார் ஹுசேன் சாகிப், தபால் சூபரின்டென்டெண்ட் ரிடைர்ட், காஜி காஜீ முவுஉட்டின் சாகிப், நந்தியால்; மகமத் ராசக்மரக்காயர், கடலூர் யாசன் பெருசாகிப், யூனியன் சேர்மன், பெல்லாரி ஜில்லா; அப்துல் சுப்ருகான், ஸப் அஸிஸ்டண்ட் சர்ஜன்; முல்லா ஹரேசன் அலிசாகிப், வெடிரினரி இன்ஸ்பெக்டர்.

"ராவ் சாகிப்" பட்டம்.

மிஸ்டர் P. ஆதிமூர்த்த ராவ், அனந்தபூர் முனிசிபல் சேர்மன், T. பாலாஜிராவ் நாயடு டெப்டி கலெக்டர் P. ராமன். டிஸ்ட்ரிக்ட் முனிசீபு, P. ராமசந்திரராவ், ஹைகோர்ட் சீப் இண்டர்பிரிடர், H. கிருஷ்ணசாஸ்திரி, ஆர்கிய

ரலஜி சூபரின்டெண்டெண்ட், P. சுப்பையர், போலீஸ் இன்ஸ்பெக்டர், C. கந்தசாமி முதலியார், போஸடல் சூபரின் டென்டெண்ட், பி. கே. சுப்பைய்யர் டெப்டி ரிஜிஸ்ட்ரார், செக்ரிடேரியட் ஆபீஸ், C. B. ராமராவ் அஸிஸ்டண்ட் டிஸ்டிரிக்ட் மெடிகல் அண்ட் சானிடேரி ஆபீஸர் சி. பக்தவத்ஸலு நாயுடு டெப்டிகலெக்டர், மத்ரா குலாப் ராய், கெமிகல் எக்ஸாமினர் ஆபீஸ; கே. எம். மாதவமேனன். எல். எம். எஸ். அஸிஸ்டண்ட் டிஸடிரிக்ட் மெடிசல் அண்டு சானிடெரி ஆபீஸர்; கே. ரெங்காசாரி, மதராஸ் ரிகார்ட் ஆபீஸ; கே பி. ராமசுவாமி அய்யர், ஸால்ட் இன்ஸபெக்டர்; ஓய். வெங்கட்டராவ் பந்துலு, தாசில்தார், கிருஷ்ணா ஜில்லா கே. எம். கிருஷ்ணாராவ் பந்துலு, கவர்ன்மெண்ட் பிளீடர், குண்டூர்; எல். ஏ. ரங்கசாமி அய்யர், ஆனரரி அஸிஸடெண்ட் இன்ஜினீயர்; வி. ரத்தன முதலியார், சூபரின்டெண்டெண்ட். கன்ட்ரோலர் ஆபீஸ் ஆர். டி. சுவாமிபிள்ளை ஸப் அஸிஸடண்ட் ஸர்ஜன், பர்மா.

—:-:—

வெங்கிடசாமி நாயுடு அண்டு ஸன்சு:—ஜார்ஜ்டவுன் இண்டாவது பீச்லேனிலுள்ள மெஸர்சு வெங்கிடசாமி நாயுடு அண்டு ஸன்சு என்னும் பெரிய கம்பெனிக்கு திவான்பதூர் எம். வெங்கிடசாமி நாயுடு சொந்தக்காரர் தோல் வியாபாரம் வெகு தாராளமாய்ச் செய்து வந்தார் திடீரென்று இவருக்கு நஷ்டம் வந்து விட்டதனாலே நேற்று முன்தினம் அந்தக் கம்பெனிக் கட்டிடத்து வாயிலில் மெஸர்சு ஷார்ட் அண்டு ப்யூஸ் என்ற ஸொலிஸிடர்களால் அடியிற் குறிப்பிட்ட பிரகாரம் நோட்டீசு போடப் பட்டிருக்கிறது:—

“இன்றையதினம் மெஸர்சு எம் வெங்கிடசாமி நாயுடு அண்டு ஸன்சு என்னும் பெயர் கொண்ட பரமை (firm) ச்சேர்ந்த மெம்பர்களெல்லோரும் இன்ஸால்வெண்டுகள் என்று கனம் மிஸ்டர் ஜஸ்டிஸ் பி. ஆர். சுந்தரய்யரால் உத்தர விடப்பட்டிருப்பதனாலே, அவர்களுடைய சொத்து முழுவதும் அபிஷியல் அஸையிடம் இருக்கிறதென்பதற்கு நோட்டீசு. டிசம்பர் மீ. 20வ, 1911.”

—:-:—

# “THE TRUTH BEHIND THE CORONATION DURBAR.”

—(*)—

*(From the Madras Dailies.)*

It was a splendid service which the Bishop of Madras rendered to the cause of truth and the coming of the Kingdom of God, in the impressive sermon, which he preached to the world from the Coronation Durbar Camp on Sunday last. (10th Dec.) The Truth behind the Coronation Durbar is that "the Kingdom of the World is become the Kingdom of Our Lord and of His Christ." The Lord Bishop said that he spoke only as the representative of the Christian Community in India, but every community and every religion will admit the Truth behind the Coronation Durbar in the text which he took up for his sermon. Only they will not consent to limit the full spiritual meaning of the expressions used by any narrow interpretation of sect or creed. "The vast responsibility of Empire" rests not on the shoulders of the King alone, but on all who are subjects and citizens of the State and so form the body-politic of the Empire of which the King is the symbolical head as the devine representative of Godly power on earth.

"Among men I am the King," said the Lord Sri Krishna to Arjuna, and the accepted Ideal of Kingship as propounded by our *Dharmasastras* is the same as the Lord Bishop of Madras so well and happily expressed in the beautiful sermon which he preached from his place in the Coronation Durbar Camp. "Rajah" means one who pleases all entrusted to his care.

"The history of the world is the gradual fulfilment, even through the working of human passions and ambitions, of God's Eternal Will. Whatever is out of harmony with that Will comes to nought. Whatever opposes it is swept away." The Kingdom of the World must *ever remain* the Kingdom of the Lord' and of His Son, the anointed of the Lord and the Saviour of men. I use Christ in the fullest significance of the word as "the Son of God and the Saviour of men"—*the Kumara Guru*—"the Son and Saviour" with whom every Hindu is only too familiar.

The Bishop of Madras has lifted on high the Holy Flag of Truth, and may all true sons of Barathavarsha and the Empire stand by it and fight for truth—for Truth is a principle that must triumph in the end. Let us, by all means, sweep away the narrow traditions and unspiritual (unchristian) feeling that make the Brotherhood of Man impossible. I trust everyone will bear in mind the exhortation of the noble minded Bishop who expressed the need of the hour as "a sincere effort on the part of individual men and women to look fairly at the facts of life in the spirit of Christ (which is the Spirit of Truth and of Self-Sacrifice) and to apply to their relations with all classes and all races the principle of Brotherhood.'

All India and "the better mind of India" which is keeping 'the Altar-Fire of Consciousness' (*Chidagnikunda*) alive by sacrificing their own individual selves therein say 'Amen!' to this.

As one who has been working now for eleven years uninterruptedly in the cause of truth, ever trying to keep "the Highest Ideal" before man, it gives me great pleasure to bear willing testimony to the truth of the Bishop's statement, that in spite of the frailties and failings of the majority of Engilshmen such as we ordinarily meet with in India, there are good souls and true who are working with a true heart, realising their responsibility to the World and the Empire.

The "Ideal Englishman" in India not only stands for efficiency, for duty and for justice but he also stands still more definitely for Brotherhood and Love, though his lower passions and ambitions make him forget the highest ideal in the struggle to be ever a victor in the battle of life. I did come across the ideal Englishman some 11 years ago and I can speak of him only in the spirit in which he shone before the Holy Mystery of the Lord when he thirsted for a moment to know its meaning. On that momentous occasion was conceived the Mission of the Empire and the World which the Lord Bishop so impressively put before the August Congregation to whom he preached his thrilling sermon.*

After putting before the imperial congregation "the Final Goal" as "the Fatherhood of God and the Brotherhood of Man," the holy man inspired of God for the great occasion spoke, in words that must ring into the ears of all good men and true unto eternity, as follows :—

"The permanent value of any Empire or any social institution must depend upon its power of bringing near the Kingdom of God by making real and effective in the world the ideal of Brotherhood" that is to say, of "Christly Love"-*Paramkarunai* which feeds on and grows perfect by "Neighbourly Love" or *Jeevakaruniam*.

"Here then lies the work of our Empire in the coming years, and let us not forget that *the achievement of this great end does not lie merely with statesmen and politicians*, but FAR MORE WITH THE ORDINARY PEOPLE IN THE ORDINARY ROUTINE OF DAILY LIFE."

The italics and small capitals are mine; and I emphasise it most because that is a truth which has impressed itself strongly on me and possessed my heart and soul these many years. Call it accident or what you will, I see the guiding Hand of Providence in the incident which brought me a note from the Editor of a leading Almanac and Directory for revised and "up to date" information concerning the work to which I have dedicated myself heart and soul just 11 years ago, giving it the universal name of "ANANDA MISSION" whose origin and aim as I just copied it for the Editor of the Directory I give below without mutilation or alteration. The ANANDA MISSION which aims at realising "the permanent value of any Empire or any social institution" as beautifully propounded by the Lord Bishop of Madras, was first conceived at Chidambaram after the *Arudradarisanam* of 1901, on the motion of an eminent Englishman who thirsted for a moment to know the truth of the Holy Mystery '*Chidambara Rahasyam*' and called into existence by the Grace of the Almighty at the instance of a true Englishman thirsting to know "the Truth as it presents itself now" to a seeker who seeks it "without reference to this or that more or less imaginary divine system." Planned on Christmas Eve 1902, and founded on Thursday week of the New Year 1903, having for its aim, the propagation of Truth and Knowledge as the Way to Health, Happiness and Life, through Self-Help, Self-Control and Self-Culture." "Our theism is the purification of the Human mind" and our motto is "Hitch your wagon to a star." We allow the fullest freedom of thought and action to all, demanding of them only consistency in thought, word and deed. Our methods of work are indicated by the Vedic injunctions we have adopted *viz.*, "*Satyam Vada*"—"Speak the Truth"; and *Dharmam Chara*." Do thy duty *i.e.*, *Obey the Moral Law of thy Being*." Our Guardian Spirit is *Ananda Natesa*—"the Holy Ghost," and our leader and guide is *Sri Akhandânanda Satguru* to whom we bow in salutation and absolute obedience.

It was under the guidance of this Spirit that I suggested the name of Georgetown as a substitute for that odious name "Black Town" and did many other things which have met with Royal Approval. "Recognition" I did not seek and do not want, except the approval of one's own consciousness which I have since received in abundance though men may praise and blame one another according to the mood they find themselves in.

It does one's heart good to affirm and reaffirm "the Truth behind the Coronation Durbar" when it is brought home to men's minds in the most prominent and at the same time the most impressive and holy way on a solemn and sacred occasion like the solemn Church-Service in "the Coronation Durbar Camp," on a day which is devoted wholly and entirely to the Service of God. Let us all—King or subjects—realise "the Final Goal" which is the Unity of God and Comity of Nations.

For what does the Brotherhood of Man amount to in the end but the comity of nations, just as the brotherhood of man indicate the comity of class and creed in the Constitution of a State. "Nothing less than the Love and Self-Sacrifice of Christ will avail for the great work of Empire which God has entrusted to us (Indians and Englishman alike) *to-day* "the great Coronation Durbar Day-when India claims its Sovereign Emperor true as the man entrusted to keep the ancient ideal of Kingship unsullied and hand it down from generation to generation," by making it real and effective in the world," *i.e. in every day life*, the idea of Kingship which has been so solemnly preached in the name of God and heard with reverence on the Sabbath preceding this, the Great Coronation Durbar Day.—*Aum Tat Sat.*

Lalitalaya, Madras, S.
*12th December 1911.*

C. V. SWAMINATHA IYER,
K. S. S. A.

* The Madras *Mail* in its issue of 16th December published only so far, while the whole appeared unabridged in the *Madras Standard* of 15th December and the *Indian Patriot* of 18th idem.

"Among men I am the King"—The Bhagavad Gita.

# In Honor of the Coronation of their Imperial Majesties.

(Special for the Vivekachintamani.)

---

## மாட்சிமைதங்கிய இந்திய சக்ரவர்த்தி சக்ரவர்த்தினியார் அவர்கள் மகுடாபிஷேகத்தின் பொருட்டு.

### தசாங்கம்.

### குறள்வெண்பா.

செங்கோன் முடிமன்னர் தெய்வமென யாவர்க்கும்
நங்கா தலர்காள் நவில்.

### நேரிசை வெண்பா.

### 1. பெயர்.

சீரார் பசுங்கிளியே தேயமெலாம் ஆள்கின்ற
பேரார்நம் மன்னன்பேர் பேசிடுவாய்—பாராரும்
மன்ன ரெலாந்துதிக்க மண்டலத்தில் மன்னர்சடம்
மன்னவனும் ஜார் ஜெனவே வாழ்த்து,

### 2. நாடு.

அஞ்சுகமே எங்கள் அரசன் திருநாட்டைக்
கொஞ்சி மொழிவாய் குதூகலித்து—மஞ்சகல்செய்
செங்கதிரோன் சோதியது செல்லும் இடமெல்லாம்
அங்கவன்றன் நாடாம் அறி.

### 3. நகர்.

பைங்கிளியே எங்களது பார்த்திபன்றன் நன்னகரைச்
சங்கையறச் சாற்றுய் சதுருடனே—துங்கமிகும்
†பொன்னகரும் புன்மையெனப்போற்றப் பொலிந்திடுமே
தன்னிகர் டில்லி‡ நகர் தான்.

### 4. ஆறு.

கண்டுநிகர் சொற்கிள்ளாய் காவலன்றன் நன்னதியை
விண்டிடுவாய் எங்கட்கு மேன்மையுடன்—மண்டலத்தில்
சார்ந்தோர் தமைப்புனிதம் சாரமலந்துடைக்கும்
தேர்ந்தோர் புகழ்க்கங்கைதேர்.

### 5. மலை.

நற்குணங்கள் ஓங்கும் நமதரசன் நன்மலையைப்
பொற்கிளியே சற்றே புகன்றிடுவாய்—சற்குணுயர்
தேனருவி மாறுத்திகழ்சிகரம் தேவருறை
வானுருவும் பொன்வரையாம் மற்று.

### 6. கரி.

மன்னுயிரைத் தன்னுயிர்போல் மாண்புடனேதான்புரக்கும்
மன்னனவன் ஏறும் வலிகரியைப்—பன்னிடுவாய்
பச்சைநிறக் கிள்ளாய் பகைவரை வெம் போரதனில்
பிச்சிடுமே மற்றதுதான் பேசு.

### 7. பரி.

அஞ்சொல் அரு[illegible]கிளியே அன்பாய் நமைப்புரப்போன்
விஞ்சுபரி தன்னை விளம்பிடுவாய்—வெஞ்சமரில்
ஒன்னலரைத் தாக்கி உறுவெற்றி யோடுவக்கும்
மன்னனவன் காண்பான் மகிழ்ந்து.

---

† இந்திரன் பட்டணம் The capital of Indra. ‡ The old name is *Indraprusta*.

### 8. படை.

மார்தளிரைத் தின்று மகிழ்கிளியே நம்வேந்தன்
எந்துபடை தன்னை இசைத்திடுவாய்—போர்தபகை
வல்லிருளை நீக்கி மகிதலத்தில் சூரியன் போல்
நல்லொளியைச் செய்திடுமே நன்கு.

### 9. முரசு.

கற்றவர்சொல் கேட்டுக் கழறுகின்ற கிள்ளாய்நம்
கொற்றவன்றன் வார்முரசைக் கூறிடுவாய்—பற்றலர்தம்
நெஞ்சதிரத்தானதிரும் நேர்மை யுடைத்ததுகாண்
வஞ்சமிலார்க் கில்லையது மற்று.

### 10. மாலை.

சேர்ந்தவாய்க் கிள்ளாய்நம் சீர்மன்னன் மார்பகத்தில்
வந்துகின்ற மாலை இயம்பிடுவாய்—தீந்தணறும்
பூமாலை போலப் புகழ்வெற்றி யாலமையும்
தேமாலை வாடா தெளி.

### 11. கோடி.

கற்றுரைக்கும் கிள்ளாய் கரிசறவே பாலிப்போன்
வெற்றிக் கொடியை விளம்பிடுவாய்—மற்றதுதான்
மண்டுபகை வன்கரிக்கு வாய்த்ததுகாண் வான்முகடு
கொண்டுயரும் சிங்கக்கொடி.

### 12. குடை.

பொற்கூண்டில் ஒங்கும் பொலன்கிளியே அன்பார்நம்
சற்கோமான் நற்குடையைச் சாற்றிடுவாய்—விற்குலவும்
பான்மதியம் போலப் பனிநிழலைச் செய்திடும்தண்
பான்மையதாம் மற்றதுதான்பார்.

### 13. செங்கோல்.

தேன்மொழிசேர் தத்தாய்நம் தேயமதை ஆள்வோன்செங்
கோன்முறையின் சீரதனைக் கூறிடுவாய்—வான்மறையும்
வாரிதியும் தம்வரம்பில் மாறுகினும்தான்சிறிதும்
சீரதனில் கோடா தெரி.

### 14. முடிசூட்டும் தினம்.

பத்தொன்பான் நூறுடன்சேர் பஃதொன்றின் சீர்டிஸம்பர்
சித்தியுறு பன்னிரண்டின் செவ்வாயாம்—புத்திமிகும்
தார்மன்னன் ஜார்ஜினுக்குத் தங்குபுகழ் டில்லியதில்
சீர்மகுடம் சூட்டும் தினம்.

### 15. வாழி.

வாரார்மன் ஜார்ஜும் எழிலரசி மேரியெனும்
சீரார் இளங்கொடியும் செங்கோலும்—பேராரும்
இந்தரவி யுள்ளளவும் எங்கோன் குடிமுழுதும்
சுந்தரமாய் வாழ்கசுகம் துய்த்து.

வித்வான் நா. சேதுராமய்யர்.

## An Indian Journalist's Silver Jubilee.

—:-:—

(*From the Madras Mail of 11th May, 1911.*)

SIR,—I have been celebrating the Silver Jubilee of my career as a jouanalist and a worker in the cause of the diffusion of knowledge and enlightenment among the masses, in my own way, communing with the Holy Spirit and reflecting on the work of a quarter century of unceasing endeavour to stick to the ideal which moved me from within and gave me tne necessary strength and courage to persist and persevere in the plan of work I have sketched out for myself, through thick and thin, working undaunted against innumerable odds. Will you permit me, Sir, on an occasion like this, to convey, through your columns, my heart-felt thanks and gratitude to all those who have stood by me in my hour of trial and encouraged me with their sympathy, support and literary help? My object from the very beginning was "to make an earnest attempt," as the *Madras Mail* of the 12th April, 1892, put it, in commending my scheme for the diffusion of knowledge, "to open the eyes of the educated Hindus to the condition of their less educated brethren and to share with the masses to some extent the advantages of education and refinement." My main endeavours, therefore, were concentrated in securing the co-operation of as many people in the cause as possible.

Some of the members of Committee have retired from their labours in India, a few have gone over to the majority and some at this moment are in high and responsible positions. Though for several years past, I have not, in obedience to my religious vow, had occasion to seek their support in any material way, yet the consciousness of their genuine sympathy and moral support has been a source of great inspiration to me to continue my work without turning my back. To all such good souls, including the successive Editors of the *Madras Mail*, allow me to tender my heartfelt thanks publicly through your columns. I cannot sufficiently express my indebtedness to the late Mr. L. C. Innes, I.C.S., to Mr. H. O. D. Harding I.C.S., to Dr. D. Duncan, to the late Dr. G. U. Pope, Miss E. A. Manning and several others whose names come crowding to my mind. I am also indebted to Mr. J. H. Stone for the moral support he gave me while I was struggling with the question of vernacular studies. I owe it to an I.C.S. member of my Committee for including "Relgion and Morality" within the scope of the Agency's work, which opened up a virgin field for the employment of all my physical and spiritual energies and my unbounded faith in the goodness of the divine order of things. My work has met with appreciation and encouragement on all sides, as you will see from the advance proof of my article on "My Silver Jubilee" in the *Vivekachintamani*, winning for me royal approbations and the heartfelt thanks of Royalty through three generations. I mention this merely to show how the good will of so many good souls has sustained me and encouraged me during the most trying situations in life, which to me have been made a hundredfold more trying by the loss at a critical time, of my sweet partner in life who was also the partner of my work.

But the secret of my success was not in the worldly rewards of my work, which to me were poor enough; but it brought to me a compensation in the satisfaction of my own good conscience, which to me was more valuable and inspirting than anything else. Dr. D. Duncan writing to me in July, 1905, from his cosy retreat in Scotland, while engaged in his biography of Herbert Spencer said:—"It astonishes me to see your persistent devotion to what you regard as the truth. If you do not get much worldly reward, you have at least the satisfaction of a good conscience." Here, then, is the secret of my success such as has been vouchsafed to me by divine grace and the heavenly reward for my unstinted and unsparing work in the cause of truth, or if you please, "in what I regard as truth." I am reviewing my experience of the past twenty-six years as a prominent member (in work at least) of the vernacular Press and the ideal that moved me to work steadily for its realisation all these years.

My object in writing to yo now is, as I said, to enable me publicly to tender my thanks and express my gratitude to all who have helped me by thought, word or deed, and as these include persons of the highest standing such as Governors and High Court Judges or distinguished members of the Civil Service, down to the poor but earnest student of life who wished to contribute his mite to the cause of spreading knowledge and enlightement among the less educated of our brethren, I crave your permission and theirs to tender to them one and all publicly, through your columns, my heart-felt thanks on this the unique occasion of my Silver Jubilee.

C. V. SWAMINATHA IYER, K.S.S.A.

Secretary, D. K. Agency and Editor V. C.

Madras, 8th May.

---

*Harrowgate, 19th June 1911.*

"Dear Swaminathan,

Please accept my hearty congratulations on the appearance of the Silver Jubilee Number of the *Viveka Chintamani*, a copy of which I received last Mail.

Truly Yours, D. DUNCAN.

## THE COMPASSION OF THE "ALONE-BECOME."

### தனிநின்றிரங்கல்.

தனியன்கள்.

I.

செத்துச் சுண்ணாம்பாய்ச் சிவனே யென்றிருந்தானைப்
பத்துப் பேர்காணப் பரிந்தழைத்துக் கூத்தாட்டிப்
பத்துப்பேர் நகைக்கப் படுகுழியிற் றள்ளிவிட்டுப்
பற்றெல்லாம் போனதினால் பயமவனுக் கென்னென்றான் !

II.

இடறி விழுந்தானை யெட்டிக் காலாலுதைப்ப னென்று
பிடரியிலே கைகொடுத்துப் போகச் சொல்லென்றானம்மா !
இடறிலா வென்னப்பன் காலாலுதை பட்டவன்முன்
இடறிழைத்துக் கட்டிக்கொண் மிடறினுயிர் தவிக்கிறதே ! *

III.

ஆங்கால மெல்லா மரஹரா வென்னாமல்
சாங்காலம் வந்தும் சங்கரனை யழைக்காமல்
போங்காலம் வந்து பொறிபுலன் களொடுங்கியபின்
ஓங்காரப் பழம்பொருளை யுணர்வதுதா னெப்படியோ!

IV.

என்னென்ன செய்தினு நீ யேதேதி யற்றிடினு
மென்னம்மை யென்னப்ப னென்னீச னென்று சொல்லு
முன்னம்மை யுன்னப்ப னுன்னீசன் கருணையுன்னைப்
பொன்னுலகம் போகையிலே புறக்கணியா தரவணைக்கும்.

குமரகுருபரன்துணை.

---

* சரவோட்டங் தவறியதனால் பிராண சங்கடம் நேர்ந்து தொண்டையிலுயிர் துடிக்கின்றது கண்டிரங்கல் கூறியபடி யென்க.


PRINTED AT THE SOUTH INDIAN PRESS. 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.